ஓம் பரப்பிரம்மணே நம: **80-பக்கங்கள்.**

# அமிர்தகுணபோதினி

அறிவை விளக்கி, உற்சாகத்தைப் பெருக்கவல்லதான விகடமும், ஆநந்தகரமான அநுபவ விநோத ஞானகலா விலாஸங்களும் நிறைந்திலங்கும் அமிர்தச் சுவையுள்ள உயரிய மாதப் பத்திரிகை

பத்திராசிரியர்:—திரிசிரபுரம் எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு.

" எண்ணிய எண்ணியாங் கெய்துப; எண்ணியார்
COPY RIGHT] திண்ணிய ராகப் பெறின். " (திருக்குறள்.) [REGISTERED.

| | | |
|---|---|---|
| கமலம்-6. | சென்னை பிரஜோற்பத்தி௵ ஐப்பிசி௴ 1௳ | இதழ்-67. |
| Vol. 6. | 1931-ம்௵ அக்டோபர்௴ 17௳ | No. 67. |




"சீவர்மேற் கருணை செய்வது கடனே" என்பது வேதசம்மதம். வேதம் சீவகாருண்யத்தையே சிறப்பித்துப் பேசும். சீவகாருண்ய மென்பது மற்ற உயிர்களிடத்து இரக்கமுடைமை. சீவகாருணிய மென்று பொதுப்படக் கூறியதனால் இன்ன உயிர்களிடத்துத் தான் இரங்க வேண்டு மென்னும் நியதி யில்லை. தன் கண்முன் வருந்தும் எல்லா உயிர்களிடத்தும் ஒருவன் இரங்க வேண்டுமென்பதே விதி. உயிர்கள் பல வகை; வருத்தம் ஒன்றே. கூழுக்கு உப்பில்லை யென் பார்க்கும், பாலுக்குச் சக்கரையில்லை யென்பார்க்கும் வருத்த மொன்றே யென்பது போல, அவரவர் சக்திக்கியன்றவரையும் வருத்தமும் எல்லார்க்கும் ஒன்றேயாய் முடியும். பல்லாயிரம் உயிர்களைக் காக்கும் ஒரு பெரிய சக்ரவர்த்திக்குத் தன்னுடைய தேசத்தை மாற்றரசன் வெல்லவருங்கால் உண்டாகும் வருத்தமே, உண்ணச்சோறற்று வருந்தும் ஏழைப்பரதேசிக்கு உண்டாகும் வருத்தம். சக்ரவர்த்தியின் அளவு கடந்த செல்வத்திற்கு அது வருத்தமாவது போல, உண்ணவழியற்றிருக்கும் ஏழைப் பரதேசிக்கு ஒரு கவளம் சோறு இல்லாதிருத்தலும் வருத்தமாய் முடியும். ஆதலின், வருத்தத்தில் செல்வர்களை ஒத்தவர்களாகவே பரமதரித்திரர்களும் உள்ளார். அவ்விதமே, வாயில்லாப் பிராணிகள் எல்லாவற்றிற்கும் வருத்தம் ஒன்றேயாதலின், அவைகளின்பால் இரங்க வேண்டுவது அவசியமெனப்படும். இவர் பகைவர், இவர் உறவர், இவர் சிநேகர்,

இவர் யாரோவென்று வித்தியாசப் படாத சீவகாருணியமே சிறந்தது. பிறருக்குண்டாகும் வருத்தத்தை ஒருவன் காணுங்கால், முன் தனக்கு உண்டாயிருந்த அத்தகைய வருத்தத்தை ஆலோசித்தல் வேண்டும். அப்பொழுது பிறர் படும் வருத்தம் இவ்வளவு கொடியதென்பதும், தான் அதற்கு உதவவேண்டுமென்பதும் விளங்கும். டம்பம், புகழ், பொருள், புண்ணியம் முதலியவற்றைக் கருதி ஒருவன் மற்றவர் மீது இரங்குவானாயின், அவ்விரக்கம் பயன் பெறாது. எல்லாச் சீவர்களையும் ஒப்பநோக்கி ஏற்ற காலத்தில் ஏற்ற விதமாய் உதவ வேண்டும். ஐயோ! நமக்குண்டாயிருந்த வருத்தத்தைப் போலத்தானே இவனுக்கு அல்லது இந்தப் பிராணிக்கு இவ்வருத்தம் உண்டாகுமென்று கருதி, அது தீர்த்து, அவனுக்கு அல்லது அந்தப் பிராணிக்குச் சுகமுண்டாக்குவதே நமது கடமையென்ற இரக்கமே சாலச் சிறந்தது. சிபிச் சக்ரவர்த்தி தன்னை அடைக்கலம் புகுந்த புறாவுக்கு இரங்கினது—டம்பத்தைக் கருதியன்று, புகழைக் கருதியன்று, பொருளைக் கருதியன்று, புண்ணியத்தைக் கருதியன்று. பின்னை எதைக் கருதி? அதன் துன்பத்தைத் துடைப்பதொன்றைக் கருதியேயென்க.

ஃ

"பச்சிலையுங் கிள்ளப்படுமோ பராபரமே" என்றார் தாயுமானவரும். ஏன்? சிவ பெருமானுக்குப் பத்திர அருச்சனையில் (பத்திரம்—பச்சிலை) விருப்பம் அதிகமாயினும், அப்பத்திரத்தைக் கிள்ளும்பொழுது அதிலுள்ள புழுக்கள் இறந்துபோகுமென்பதுபற்றியே அவ்வாறு கூறினர். எல்லாம் வல்ல சிவபெருமானுக்கே அது விருப்பமான பொருளாயிருந்தும், அவ்விருப்பத்தினும் சீவகாருணியமே சிறந்ததாயிற்று. சிவபெருமானுக்குப் பத்திர புஷ்பமெடுத்து அருச்சித்தலே சிவஞானச் செய்கையென்று உணர்ந்த வியாக்கிரபாதரும் தான் பத்திர புட்பமெடுக்கும் பொழுது அவற்றிலுள்ள புழுக்கள் இறந்து பட்டொழியுமோவென்றஞ்சி, அவற்றிக்கு யாதொரு வருத்தமு மின்றி எடுக்கக் கருதி, அதுபற்றியே புலிநகத்தைத் தவஞ்செய்து பெற்றுக்கொண்டார்.

ஃ

"ஐயமிட்டார் கெட்டார்" என்பது ஒரு பழமொழி. ஆராயாமல் இந்தப் பழமொழியை நிந்தித்தொதுக்குவாருமுளர். அது அறியாமை. ஐயமிட்டார் கெட்டார் என்பதனைப் பிச்சை யிட்டவர்கள் கெட்டார்கள் என்று பொருள் பண்ணாது, ஐயமிட்டு ஆர் கெட்டார் எனக்கொள்ளுதலே தகுதி. நாமும் கேட்போம்; ஐயமிட்டு ஆர் கெட்

---

எவரும் எதிரில் இருக்கும்போது சாமான்யமாகவே போய் விடுகிறதாம், அவர்கள் தூரத்திலிருக்கும்போதோ அதிக மதிப்பாய்த் தோன்றுகிறதாம்.

டார்? ஒருவருமில்லை. தனக்குள்ள பொருள் முழுவதையும் பிச்சையிட்டால் பொருளெல்லாமழிந்து அவர்களும் கெட்டு விடுவார்களே யென்று சொன்னால், கெட்டுவிடுவதொரு புறமிருக்கட்டும். முழுவதையும் பிச்சையிடச் சொன்னவர் யார்? ஒருவருமில்லை. கையிலுள்ள பொருளை யெல்லாம் பிச்சையிட்டழிக்கும்படி ஒரு நூலிலும் சொல்லப்படவில்லை. அளவறிந்து செலவிட வேண்டு மென்பதே நீதி.

ஃ

"வளவனாயினும் அளவறிந்தழித்துண்" என்பது முதுமொழி. அளவு கடந்த செல்வத்தை யுடைய வளவனைப் (வளவன்-சோழன்) போன்ற செல்வனாயினும், தன்னிடத்துள்ள பொருளின் அளவினை யறிந்து அவ்வளவிற்கேற்ப இயன்றவரையில் பிச்சையிட வேண்டு மென்பதே நீதி. வருவாயுட் கால் வழங்கி வாழ்தல் என்றார் பெரியோர். அதாவது, தனக்கு வரும் வருவாயில் (சம்பாத்தியத்தில்) அல்லது தனக்குள்ள சொத்தில் நாலிலொருபங்கு எடுத்து, அந்த ஒரு பங்கைத் தர்மத்திற் செலவிட வேண்டு மென்பதே கட்டளை. "ஆனமுதலில் அதிகம் செலவானால்" கெடுவான்,--என்னும் நல்வழியைக் கடைப்பிடித்து அளவறிந்துதான் செலவிடவேண்டும். அளவறியாமல் செலவிடுவது தீங்காய் முடிவதும் நிச்சயம். அப்படியிருந்தும், உண்மையும் அவசியமு முணர்ந்து தருமத்திலேயே கருத்துடையனாய், வேறெல்லா உலக காரியங்களையும் அதற்கு இணையில்லையென்று ஒதுக்கித் தருமத்தையே பெரிதெனக் கருதிச் செய்து தன் பொருள் முழுவதையும் அதற்கென்றே செலவிடினும், அந்தத் தருமமே அவனது கேடு காலத்தில் அவனுக்கு உதவி செய்யும். இதற்கு ஒரு கதை யுண்டு.

ஃ

"நீளத் திரிந்தனையே நீங்கா நிழல் போல், நாளைக்கேன் செய்குவாய் நல்குறவே—(நல்குறவு—தரித்திரம்) காளத்தி, நின்றைக்கே சென்றக் கால், நீ யெங்கே நானெங்கே, இன்றைக்கே சற்றேயிரு" என்று ஒரு புலவர் பாடினார். அதன் வரலாறு பின்வருமாறு:— தொண்டை நாட்டில் ஓரூரில் காளத்திப்பிள்ளை யென்பவர் ஒருவரிருந்தார். அவர் கல்வி கேள்விகளில் வல்லவர். நிறைந்த கல்வியுடையாரிடத்துச் செல்வம் நிலைக்காது என்பது அவருக்கு விரோதம். கல்வியோடு கூடச் செல்வமும் பெற்றுள்ளவர். தன் செல்வ முழுதும் வித்துவான்களுக்கும், தன்னை யாசிக்கும் மற்றவர்களுக்குமென்றே கருதி யிருந்தார். வந்தவர்களுக்கெல்லாம் மாறாமற் கொடுத்து வந்தார். இவர் கொடுக்கும் கொடையால் அவ்வூராளும்

---

வீட்டிற்குத் தலைவனெவனோ அவனைக் சேவலப்படுத்திவிட்டு வீட்டார் கௌரவம் பெற முடியாது. என்ன சேவலப்படுத்தினும் ஊரார் அவனைத்தான் மதிப்பார்கள். சம்பாதிக்கிறவனின் பக்கமே உலகு சேரும்.

அரசனுக்கு அவமானம் மிகுதியுமுண்டாயிற்று. அந்த அவமானங் காரணமாக காளத்திப்பிள்ளையின் செல்வத்தைப் பலவிதத்தும் அழிக்கத் தலைப்பட்டான். ஃ

"அரசனே நினைத்தால் ஆகாததுண்டா?" காளத்திப் பிள்ளையின் செல்வமெல்லாம் அழிந்து விட்டது. அன்றாடம் வயிறு வளர்த் தற்கே அவரால் முடியாத பக்குவத்தில் வந்து விட்டது. பெருஞ் செல்வர்; என் செய்வார் பாவம்! அவருடைய சத்திரங்களே இன் னும் அங்கங்கே பிரபலமாய் விளங்கிக் கொண்டிருக்க, அவருக்கு வயிற்றுக்கு இல்லை யென்றால் அது யாருக்குத் தான் மனஞ் சகிக் கும்? பரிதாபம்! பரிதாபம்! அவர் அந்த ஊரில் வசிக்க மனம் சம் மதியாது மனைவியுடன் வேறோர் தேசம் சென்றுவது வாழலா மென்று கருதினார். ஃ

"வாழ்ந்தவன் கெட்டால் வறையோட்டிற்குமாகானே." ஒரு நாள் இரவில் ஒருவருக்கும் தெரியாமல் மனைவியுந் தானும் புறப் பட்டுப் பத்து மைலுக்கப்பாலுள்ள தம்முடைய சத்திரத்திலேயே மறைந்து போய்ப் படுத்திருந்தார்கள். விடியுமுன் போய் விடலா மென்பது கருத்து. அப்படிப் படுத்திருக்குங்கால் அவர்கள் பக்கத் தில் ஒரு பிரயாணியும் படுத்திருந்தான். சுமார் 11-மணி இருக்கும். அப்பொழுது தான் அவன் வந்தான் போலிருக்கிறது. 11-மணிக் குச் சத்திரத்திற் சாதம் ஏது? இவனுக்கோ பசி அதிகம். பரமதரித் திரன். பாவம்! என் செய்வான்? வயிறோ பசியால் வாடுகிறது. சோற்றிற்கோ வேறு வழியில்லை. கையிலோ காசுமில்லை. கடன் கொடுப்பாரே யாருமில்லை! நிசி வேளை! பசியால் நித்திரையும் வர வில்லை; அரை நித்திரை; புலம்புகிறான்:

"நீளத் திரிந்தனையே நீங்கா நிழல் போல்
நாளைக்கென் செய்குவாய் நல்குரவே—காளத்தி,
நின்றைக்கே சென்றக்கால் நீயெங்கே நானெங்கே,
யின்றைக்கே சற்றே யிரு"

என்றான். இப்பொழுதுதான் நமக்கு இவரை இன்னாரென்று தெரிந் தது. இவர் ஒரு வித்துவான். வித்துவான்களுக்குத்தான் தரித்திரம் இயல்பாயிற்றே! தமது தரித்திரக் கொடுமையால் நமது காளத்திப் பிள்ளை அவர்கள் மீது ஏதோ பிரபந்தம் பாடி வந்திருக்கிறார் போலிருக்கிறது. அவருக்கு நமது காளத்திப் பிள்ளையவர்களின் தற்கால நிலைமை தெரியாதிருக்கலாம். தெரிந்தால் ஏன் எடுத்தடி

---

தான் நாற்காற் பாய்ச்சலில் ஓடிக்கொண்டிருக்கும்போதே தன் எஜ மானன் ஓயாமற் சவுக்கால் தன்னை வீசுவதைக்கண்ட குதிரை, இந்த வீச்சுக்கு என்ன பொருள் என்பதே தெரிந்து கொள்ள முடியாததாகித் திகைத்துக் கடைசியில் இடறிக் கீழே விழுந்து வண்டியையும் உடைத்து விடுகிறது.

வைப்பார்? எத்தனை நாள் பட்டினியோ பாவம்! பேனைவப்பிடித்த கவிஞனுக்கு வேறு பிழைப்பு தெரிவது கஷ்டந்தான். இவர் தரித்திரம் வந்த இங்கும் விட்டொழியவில்லையே! சத்திரத்துச் சாதத்திற்குக் கூடவா சனியன் பிடிக்க வேண்டும்? இப்படி இவர் புலம்பவே, அரை நித்திரையிலிருந்த நமது காளத்திப் பிள்ளையின் காதில் விழுந்தது. ஐயோ! அவர் மனம் பட்ட பாட்டை நாம் என்னவென்று சொல்வோம்! சீவகாருண்ணிய சிந்தையுடையவர் எப்படிப் பிறர் வருத்தம் பொறுப்பார்? பிறர் வருத்தம் பார்த்தும் திடத்தோடிருக்கும் பேதை லோபிகளைப் போலவா நமது காளத்திப் பிள்ளையவர்கள்? மனம் நொந்து, மனைவியைச் சத்தப்படாமல் எழுப்பி, கேட்டனையா இவர் பாட்டை யென்றார். ஐயோ! இந்தச் சண்டாளி இந்த வயிற்றெரிச்சலைக் கேட்கவும் காலம் வந்ததே! என் செய்குவேன் என்று அந்த அம்மையும் வருந்தினர். பர்த்தாவைப் போலவே பத்தினியும் இருந்தார். இவர்கள் வருந்திப் பயனென்ன? வழி யொன்று மில்லையே! இல்லாதிருந்தாலும்,

ஃ

"கேட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே" யல்லவா? என்ன கெட்டும் இவர்களுக்குச் சீவகாருணியம் கெட்டொழிந்ததில்லை. பெண்ணே என் செய்யலாமென்றார். பெண் என் செய்வாள்? கழுத்தில் தாலி ஒன்று தவிர மற்றெல்லா மிழந்த மகராசியா யிருக்கிறாள். ஐயோ! தாலி ஒன்று தவிர வேறொன்றுமில்லையே யென்றாள். வித்வானோ நம்மை நம்பி வந்து விட்டார். தன்னை நெடு நாட்பகை சாதிக்கும் தரித்திரத்தோடு வாது கூறி வீரம் பேசுவது நம்முடைய பலத்தை நம்பியே. ஏதோ பிரபந்தம் பாடி வருகிறார் போலுமிருக்கிறது. விடிந்தால் அவர் நமது ஊருக்குக் கட்டாயம் போய்ப் பார்ப்பார். அங்கு நாம் இல்லாதது தெரிந்து வயிறெரிந்து போவாரே. அவரை அங்கே உபசரித்து ஒரு வேளை அன்னமிட்டாவது அனுப்பினல் நன்றாயிருக்குமே. அதற்கும் நம்மிடத்தில் வழியில்லையே என்று காளத்திப் பிள்ளை வியஸனித்தார். அதற்கென்றால் என் கழுத்தில் கிடக்கும் தாலியை விற்றாவது சரிப்படுத்தலாம் வாருங்கள் போவோமென்று அந்தப் பத்தினியாள் கூற, இருவரும் அப்பொழுதே அந்தஇராத்திரியிலேயேபுறப்பட்டுத் தம்மூர்சென்று விடிந்தவுடன் தாலியைக் கழற்றி விற்றுச் சாமான்கள் வாங்கிவைத்துக்கொண்டு வித்துவானை எதிர்பார்க்கலாயினர். வித்துவானும் வந்தார். கண்டு கொண்டார். வீட்டுக்குள் புன்சிரிப்புடன் நுழைந்தவர்கட்கு அந்த வீட்டுக்குள்ளிருக்கிற விசாரம் தெரிகிறதா? காளத்திப் பிள்ளையின் கஷ்டத்தை இவர் கண்டாரா? மிக்க ஆநந்

---

மானத்தை விட்டுப் பத்து வித பலகாரங்களுடன் புசிப்பதை விட, பிக்ஷை எடுத்து உப்பில்லாக் கஞ்சியை மானமாய்க் குடிப்பது மேல்.

தமாய் தான் காளத்திப் பிள்ளை யவர்கள் மீது பாடி வந்த பிரபந்தத்தையும் படித்துக் காட்டினார். ஸ்நான முதலியனவும் நடந்தன. சாப்பாடும் முடிந்தது. கூடத்தில் வந்து உட்கார்ந்தார்கள். பிரபந்தம் பாடின வித்துவானுக்கு இனி மரியாதை செய்யவேண்டுமே! காளத்திப் பிள்ளை இப்பொழுது என்ன செய்வார்? விழிக்கிறார். இந்தக் காலமாயிருந்தால், "போங்காணும் போம், உமது பாட்டு மாச்சு நீருமாச்சு" என்று போவார்கள். நமது காளத்திப் பிள்ளை யவர்களா அப்படிச் செய்வார்? யோசிக்கத் தொடங்கினார். இதற்கென்ன செய்யலாம்? இவரோ நம்மை நம்பி வந்து விட்டார். வறுமையால் மிகமெலிந்திருக்கிறாரென்றும் தெரிகிறது. நமது கையிலோ ஒன்றுமில்லை. இல்லையென்று சும்மா அவரை அனுப்புதலும் கூடாது. அதைவிட நாம் உயிரை விடுவதே நல்லது என்று கருதி, இருங்கள் வருகிறேனென்று சொல்லிவிட்டு உள் நுழைந்தார். தனக்குப் பரிசளிக்கப் போயிருக்கிறாரென்று வித்துவான் நினைத்துக் கொண்டிருக்கிறார். குறைந்தது ஐந்நூறு ரூபாயாவது வரும். சே! நூறு ரூபாயாவது கொடுப்பார். தக்க பிரபு, பார்ப்போமென்று இருக்கிறார். உள் நுழைந்த பிள்ளையவர்களோ கொல்லைக்குப் போய் அங்கிருந்த ஒரு பாம்புப் புற்றில் தமது கையை விட்டு, ஏ! ஸர்ப்பமே! நான் பரம தரித்திரனாய் விட்டேன். இல்லை யென்று வந்தோர்க்கு இல்லை யென்னும் ஏழ்மையில் நான் இருப்பதைவிட இறந்துபோவதே நலமென்று கருதி விட்டேன். நீ தயை செய்து என்னைக் கடித்துக் கொன்று விடுவாயானால் என் துன்பமெல்லா மின்றோடே யொழியும் என்றார்.

ஃ

"தர்மம் தலைகாக்குமே"—சற்று நேரத்திற்கெல்லாம் அவர் கையில் ஒரு கட்டியிருப்பதாகத் தெரிந்து கையை மேலே இழுத்தார். அக்கட்டி ஒரு நாகரத்தினமாயிருந்தது. பிள்ளையவர்களுக்குக் கேட்பானேன்? தலை தெரியாத சந்தோஷம் பிறந்து விட்டது. எதுபற்றி? நம்பி வருந்தி வந்த வித்துவானைச் சந்தோஷப்படுத்தி விட்டோமென்னும் களிப்பால் தான். அங்கிருந்து ஓடோடி வந்து வித்துவானிடம் உட்கார்ந்து தாம்பூலத்தில் அந்த ரத்தினத்தை வைத்துக் கொடுத்தார். வித்துவானைப் பேசவும் வேண்டுமா? அதைக் கண்டார். அவருக்கு உண்டான ஸந்தோஷத்திற்களவில்லை. அவர் நேற்றிரவு சத்திரத்தில் பேசியபடியே தரித்திரமும்,

ஃ

"நீ யெங்கே நானெங்கே" என்றொழிந்தது. வித்துவான் இரத்தினத்தை வாங்கிக் கொண்டு புறப்பட்டார். இதை விற்கவேண்டுமே. யார் வாங்குவார் என்று தேடிக்கொண்டு அவ்வூர் அரசனிடம்

போய்க்காட்டினர். அவன் இது எப்படி உமக்குக் கிடைத்ததென்ருன். காளத்திப் பிள்ளையவர்கள் தந்ததென்ருர். காளத்திப் பிள்ளை இன்னும் இது தரத்தக்க செல்வனேவென்று ஐயுற்று வித்வானைப் பயமுறுத்தி, இது நம்முடைய அரண்மனையிலிருந்தது ; காளத்தி திருடினுன் போலும். அவனைக் கொண்டுவாருங்கள் என்று ஆள் அனுப்பி, அவரைக் கேட்க, அவர் அது தமக்கு வந்த விதத்தை யுணர்த்தினர். அரசன் நம்பாது அங்ஙனமாயின், அந்த நாகம் நீ இன்னொரு முறை போய்க் கேட்டால் தனது ஜீவரத்தினத்தையும் கொடுக்கலாமே. கொடுத்தால் நீ சொல்வது உண்மையென்று நம்பலாம் என்ருன். அருகிலிருக்கும் பெரியோர்களை அவமதிப்பதே உலக வழக்கம். பிள்ளையவர்கள் அதற்கு உடன்பட்டு,

ஃ

"கொடுங்கோன் மன்னர் வாழு நாட்டிற் கடும்புலி வாழுங் காடு நன்றே" இவன் கண்பட வாழ்வதினின்றும் இறந்து விடுவதே உத்தமம் என்று கருதி, முன்னைய பாம்புப் புற்றிற் போய், ஸர்ப்பமே! இம்முறையாவது தயைசெய்து என்னைக் கொன்று விடு; இராசன் இப்படிச் சொன்னுன் என்று வேண்டிக் கொண்டு புற்றிற் கையை விட்டார். சற்று நேரத்தில் ஜீவரத்தினமும் கையிலிருந்தது. அதையும் கொண்டு வந்து சண்டாள அரசனிடம் கொடுத்தார். அரசனுக்கு நமது பிள்ளையவர்களிடத்தில் அச்சமும் அன்பும் வந்து, "நீயே செல்வன், நீயே ஜீவகாருண்யச் சீமான், உனக்கு நான் இணையல்லேன், உனக்கு நான் செய்த கொடுமையால் மீளாத் துன்ப மனுபவிப்பேன், உன் செல்வமெல்லாம் தந்தேன்; பெற்றுக் கொள்; நீ விரும்பியபடி முன்போலவே உன் கொடைத் தொழிலைத் தொடங்கிக்கொள். மேலும் உனக்கு எனது சமஸ்தானத்திலிருந்து வேண்டு முதவி செய்வேன் என்று வேண்டிக்கொண்டான். வித்வானுக்கும் வேண்டிய திரவியம் கொடுத்தனுப்பினுன். நமது காளத்திப் பிள்ளையவர்களின் தரும சிந்தை அவருக்குப் பின் எவ்வளவு அனுகூலத்தைச் செய்தது பாருங்கள். ஆதலின், சீவகாருணியமே எல்லாத் தர்மங்களிலும் சிறந்தது. அது உள்ளத்திலிருந்து, தானே ஊற்றுபோல் ஸ்வயமாக ஊறித் தோன்றவேண்டும். சீவகாருணியமுள்ளோருக்குக் கடவுள் என்றும் துணையாவார். சீவகாருணியத்திலேயே எல்லா மதங்களின் தத்துவங்களும், ரகசியங்களும் அடங்கியுள்ளன. சீவகாருணியத்தின் மூலமாகத் தான் எல்லாம் வல்ல இறைவனைக் காணுதலும் துதித்தலும் கூடும். சுபம்.

---

சிலர் தங்கள் விலாஸத்தில் தங்கள் பெயருடன் ஊர்பெயர் மட்டும் எழுதுகிருர்கள். வீதி, வீட்டின் இலக்கம் எதுவும் குறிப்பிடுவதில்லை. புதுத் தபாற்காரர் வந்தால் இவர்களின் இருப்பிடம் தெரியாது திண்டாட நேர்கிறது. இவ்விதம் எழுதுவதையும் ஒரு கௌரவமாக நினைக்கிருர்கள் சிலர்.




# பிறவியில் அமைந்த தன்மைகள்.



ஆணும் பெண்ணும் ஒரே உடன்பிறப்பா யிருப்பினும், பிறவியிலமைந்த தன்மைகள் அவரவரிடமும் வெவ்வேறு தான். ஆடவன் அகன்ற தோள்களைப் பெற்றிருக்கின்றான். ஸ்திரீயின் தோள் எலும்போ மார்புப் பிரதேசத்தை ஆழமுடையதாக்குவதற்குத் தக்கபடி குறுகியும், முன்னுக்கு வாாமலுமுள்ளது. மனிதனது தசைகள் நல்ல வளர்ச்சியை யடைந்து மிகு பலத்தைக் காட்டுகின்றன. ஸ்திரீகளின் விஷயத்தில் அந்தத் தசையின் வள்ர்ச்சி நன்கு அமைந்திருப்பினும், அதிகமாக வெளித்தோன்றாதபடி அவர்களுடைய எலும்புப் பிணைகளெல்லாம் கொழுத்த தசை நார்களால் மூடப்பட்டு, அதனால் அவர்களுக்கு அத்யந்த அழகையும், மனோரம்மியமான தன்மையையும் அளிக்கின்றது. மனிதனிடமோ சரீர பலம்; ஸ்திரீயினிடமோ சகிக்கும் சக்தி. மனிதனின் குரல் ஆழ்ந்தது; அதிக வன்மை படைத்தது. ஸ்திரீயின் குரலோ மெல்லியது; இனியது. ஸ்திரீயினுடைய நரம்புகளின் அமைப்பு மனிதனுடையதைக் காட்டிலும், மிருதுவும் சூக்ஷ்மமும் கொண்டது; அதனால் விசேஷித்த உணர்ச்சியையும், மனோ எழுச்சியையும் பெறுகின்றாள். அவள் அவனை இயக்கும் சக்தி கொண்டிருந்துங்கூட அவனுக்குக் கீழ்ப் படிந்தே நடப்பதும், அவனைத் தொடர்ந்தே செல்வதும் ஏன்? அவளது பெண் பிறவியின் தன்மை அவ்விதம் நடந்துகொள்ளத் தூண்டி விடுகின்றது. ஆடவர்களை விடப் பெண்களுக்கு மதப்பற்று அதிகம். அது இயற்கையிலேயே அவர்களுக்கெனப் பகவான் அமைத்த அறிவு. சரீர விஷயத்தைப்போலவே, மனோபுத்தி விஷயங்களிலும் பிறவித் தன்மைகள் இருபாலாரிடத்தும் பேதப்பட்டுக் காணும். உதாரணமாக, ஒரு விஷயத்தைப்பற்றிய முடிவைத் தீர்மானிப்பதில், மனிதன் படிப்படியாய்த் தர்க்கித்துக்கொண்டு சென்று கடைசியில் புத்திவன்மையால் அம்முடிவை யடைகிறான்.

---

வெளிக்கு அதிகமான பிரபலம் பெற்றவர்கள் தங்கள் வீட்டுக்குள் திக்கற்றவர்களாய்க் கிடக்கிறார்கள். துக்கமாகவே அவர்களின் காலம் கழிகின்றது.

ஆனால், ஒரு பெண்மணியோ தன்னுடைய ஆழ்ந்த யோசனைச் சக்தியினால் வெகு சீக்கிரத்தில் தானே அம்முடிவை எப்படியோ அடைந்து விடுகிறாள்! இதுவும் பிறவியினொரு செய்கையே; குணமே.

ஃ

இனி, பொதுவில் மனித வகுப்பில் அமைந்துள்ள பிறவித் தன்மைகளை ஆராய்வோம். தாய் தந்தையரின் பிறவித் தன்மைகள் அன்னோரது மக்களிடத்தும் பிரதிபலிக்கின்றன. சித்ரீகனுடைய குமாரன் வெகு சுலபத்தில் படங்களை வரைய வல்லவனாகின்றான். போர்வீரனுடைய புதல்வனிடம் போர்த்தன்மைக்குரிய செயல்கள் விளங்குகின்றன. தாயின் குணங்களைப் புத்திரியிடத்துக் காணலாம் பெற்றோர்களது குணங்கள் மக்களுக்குத் தொடர்வதுபோக, இனி, அவரவர்களுக்கென்றே பிறவியோடும் அமைந்த குணங்கள் வேறே தனியாகவுள்ளன. அதனால், ஒரே தந்தைக்குப் பிறந்தாரேனும், ஒவ்வொருவரும் தமது பிறவித் தன்மையின் இயல்புக்கேற்றபடி ஒவ்வொரு விதமாகப் பேதப்பட்டுப் போகின்றனர். ஒருவன் உத்தியோகஸ்தனாகிறான்; இன்னொருவன் தொழிலாளியாகிறான்; வேறொருவன் வியாபாரியாகிறான். இதுவும் பிறவியின் தன்மைகளைப் பொறுத்ததே.

ஃ

இந்தியா தேசத்திற்கு வடமேற்குத் திசையில் ஓர் அரசி தன் கணவனாகிய வேந்தன் புத்திரசந்தானமின்றி இறந்துபோனதால், ஒரு பிள்ளையைச் சுவீகாரம் செய்துகொள்ள மனதுடையவளாய் தூரதேசத்தில் வசிக்கும் தன் பங்காளிகளில் ஏழைக் குடியானவனின் பிள்ளைகள் நால்வரைக் கொண்டுவரும்படி கோரிய வண்ணம் ஆங்கிலேய ரெசிடெண்டு துரை இரண்டாவது வகுப்பு வண்டியில் அந்தப் பிள்ளைகளைக் கொண்டுவந்து அரசியின் முன் விடுத்தார். அரசி ஒரு மண்டபத்தை அலங்காரம் செய்து அதில் நான்கு மூலைகட்கும் நான்குவித சாமான்களை வைத்தாள். ஒரு பக்கத்தில் துப்பாக்கி முதலிய ஆயுதங்களையும், மற்றொரு பக்கத்தில் அதிக வேடிக்கையான சாமான்களையும், வேறொரு பக்கத்தில் தின்பண்டங்களையும், மற்றொரு பக்கத்தில் உத்கிருஷ்டமான ஸத்கிரந்தங்களையும் வைத்து, இந்தப் பிள்ளைகள் நால்வரையும் அழைத்து, இந்த மண்டபத்தில் ஜோடித்து வைத்திருக்கும் நான்கு வகையுள்ள சாமான்களில் உங்களுக்கு வேண்டிய ஒரு சாமானை எடுத்துக் கொள்ளுங்கள் என்றாள். ஒரு சிறுவன் துப்பாக்கியையும், பட்டாக் கத்தியையும் எடுத்துவந்தான். அவனைப் பார்த்து அரசி நீ சேனாதி

---

எந்தப் பத்திரிகைக்கும் அதனை நெடுங்காலமாக ஆதரித்து வரும் காருண்யமுள்ள கண்ணியர்கள் சிலர் இருக்கவே இருப்பார்கள். அவர்கள் தான் அந்தப் பத்திரிகைக்குப் பெரிய ஆஸ்தி.

பதியாவா யென்றாள். (அப்படியே 1888-ம் வருஷத்தில் அந்தப் பிள்ளை சேனாதிபதியானான்.) மற்றொரு பாலியன் வேடிக்கையான சாமான்கள் சிலவற்றை எடுத்துவர, அவனை நோக்கி அரசி நீ உல்லாஸ புருஷனாவா யென்றாள். இன்னொரு சிறுவன் தின்பண்டங்களைக் கைநிறைய வாரி வந்தான். அவனைப் பார்த்து நீ சாப்பாட்டு ராமனாய் சுகவாசியாயிருப்பாய் என்றாள். (இந்த இரண்டு பிள்ளைகளும் இதே நிலையில் தான் இருந்து வந்தனர்.) கடைசியாக, நான்காவது பையன் நல்ல புஸ்தகங்கள் நான்கை எடுத்துவந்தான். அரசி அவனைக் கட்டியணைத்து முத்தமிட்டு "மகனே, நீ அரசாளப் பிறந்தவன்" என்று கூறி அந்தப் பிள்ளையைச் சுவீகாரம் செய்து கொண்டாள். அந்தப் பிள்ளைக்கு வயது வந்து பட்டத்தைப்பெற்று இப்போதும் அரசாண்டுவருகிறது. பிறவியில் அமைந்த தன்மைகளுக்குத் தக்கவாறு அவரவர்கள் ஒவ்வொருவிதமான தொழிலையும் ஜீவனத்தையும் கைக்கொள்கின்றனர். "பிறவிக்குணத்தை மாற்றக் குருவில்லை" என்பதும் ஒரு பழமொழியே. வெளித்தோற்றத்தில் சிலர் தம்மை உயர்நலமுடையோராக நடித்துக் காட்டினும், அந்த நடிப்பை உலகமும் நம்பிவிட, அன்னோரின் புகழ்ப் பிரதாபம் எங்கணும் பரவியிருப்பினும், இயற்கையில் பிறவியுடன் அமைந்த இழிந்த சுபாவத்தை அவர்கள் கைவிடுவதில்லை. வெளிக்கோ மகா பரோபகாரி; உள் தத்துவத்திலோ பரம சண்டாளன்! புலி வெளிக்குப் பசுத்தோலைப் போர்த்துக்கொள்ளினும் தன் இயற்கைக் குணத்தை அது மறப்பதேது? பிறவிக்கொடையாளனான கர்னனையொத்துத் துரியோதனன் தர்மம் செய்ய வெகுவாய் முயன்றானேனும், கர்னனுடைய இயற்கையான பிறவிக் குணங்களை இவன் பெற முடியவில்லை. துரியோதனனைக் கொடையாளியென்று உலகம் போற்றவுமில்லை. இல்லாதது வராது.

ஃ

பிறவியிலமைந்த தன்மைகளுக்கேற்ப அவரவரிடத்தும் ஒவ்வொரு விசேஷ சக்திகள் உற்பவிக்கின்றன. அந்த விசேஷங்களை மற்றவர்கள் கொள்ள முடிகிறதில்லை. அன்று தோன்றிய ஷேக்ஸ்பியரைப்போல் இன்னொருவர் இதுகாறும் பிறக்கவில்லை. அவர் அமைத்துச்சென்ற வழியில் அவருக்குச் சமமாக இன்னொருவர் அமைக்க முடியவில்லை. புகழேந்தியைப்போல் வெண்பாவிற் சிறந்தவரில்லை. கம்பர் அமைத்த வழியில் இன்னொருவர் அமைக்கவில்லை. ஔவையைப்போல் "அறஞ்செய விரும்பு" பாட இன்னொருவருக்குப் புத்தி போகவில்லை. வள்ளுவரை யொத்துத்

---

சரியாகப் படிப்பு வராவிட்டாலும் பள்ளிக்கூடத்துக்குப் போய்வருவது ஒருபோதும் வீணாகமாட்டாது. நாலு மரங்களுள்ள இடத்தில் விருத்தியாகாத மரமும் எப்படியோ ஒருவிதமாய்ப் பிழைத்துக்கொள்ளும்.

திருக்குறளை வேறெவரும் செய்திருக்கவில்லை. வேதநாயகம் பிள்ளையைப்போல் மழை தமிழ் இன்னொருவர் வருஷிக்கவில்லை. அவரவர் அமைத்த அமைப்பு அவரவருக்குப் பொருந்திப்போயிற்றேயன்றி, மற்றவர் அதன்வழி சென்றாலும், அந்த முந்திய அமைப்பு ருசிப்பதுபோல், இந்தப் பிந்திய அமைப்பு சுவைப்பதில்லை. பிந்தியது பிந்தியதேயாகின்றது. ஒரு பத்திராசிரியர் தாம் அமைத்து நடத்திய வழியில் மற்றொருவர் அவ்விதம் நடத்த முடிகிறதில்லை. ஆகவே; புதிதாக வந்தவர் வேறொரு புதுவழியில் போகவேண்டியவராகின்றார். அந்தப் புதுவழி ஜனங்களுக்குப் பிடிக்காமல் பழய அமைப்பே சிறந்ததென்று ஏக்கமடைகின்றனர். தமது பிறவியின் குணத்திற்கேற்ப ஒருவர் அமைத்ததை அதேவிதமாக மற்றவர் செய்ய முடிகிறதில்லை. அது அதனின்றும் பிரிந்து வேறுபட்டே நிற்கின்றது. சிலர் தமது பிறவிக்குண விசேஷத்தால் மற்றொருவர் சென்ற வழி நாடாது, தாமே ஒரு நூதன மார்க்கத்தை ஏற்படுத்திக்கொண்டு, அவ்வழியில் தமது நூல்கள் பத்திரிகைகளை அமைக்கின்றனர். அந்த அமைப்பு அவர்களுக்கே பொருந்தியதாகி, மற்றவர் அதை நெருங்குதற்கோ, கைக்கொள்வதற்கோ,—பி. ஏ., எம். ஏ., பட்டதாரிகளாக இருப்பினுங்கூட,—இயலாது போய்விடுகின்றது. பட்டங்கள் பலகொண்டு அதனால் அடைந்த அறிவின் முதிர்ச்சி வேறு. பிறவியிலேயே அமைந்த அறிவின் ஊற்றுத்தன்மை வேறு. மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் பண்டித பரீக்ஷையில் தேர்ந்த அளவிலேயே, அருணாசலக் கவிராயரின் இராமநாடகத்தைப்போன்று அத்தனை சுவையுடன் இன்னொன்றை இயற்றும் ஆற்றல் கூடிவிடுகின்றதா? அது இல்லை. எவ்வித வித்யா பட்டமும், அதிகப் படிப்பும் பெறாமலே எத்தனையோ பேர்கள் தமக்கு எவரும் நிகரில்லையென உலகம் வியக்கும்வாறு எத்தனையோ காரியங்களையும், காவியங்களையும் செய்திருக்கின்றனர். அவரவர் அமைத்த அந்தந்த அமைப்பு வழியும், பாஷா நயமும் அவரவருடனேயே முடிந்து மறைகின்றன. ஆதியில் எவர் ஒரு புது அமைப்பை நிர்மாணித்தனரோ, அவருக்கேதான் அதிலுள்ள, குற்றம், குணம் முதலியவைகள் நன்கு தென்படுவனவாகிக் குற்றங்களைத் தெரிந்து களைந்து குணங்களே மிகுதியும் நிரம்பியுள்ளனவாகப் புதிது புதிதாய் அழகுபடுத்தக்கூடியதாகின்றது. அவரைப் பின்பற்றியவர்கட்கோ அந்தக் குற்றங்களைத் தெரிந்துகொள்ளும்தன்மை யேற்படாமலும், குணபாகங்களை அழகுபெற அமைக்கும் வழி தெரியாமலும் போய்விடுவதால், ஆதியில் அமைத்தவருடைய இயற்கை அழகின் ஜொலிப்பு பின்னவருக்குப் பொருந்தி நேர்படுவதில்லை. கைப்பழக்கமான தொழில்முறைகளில் முன்னவரைப்போல் பின்னவரும் தேர்ச்சிபெறுதல் கூடுமாயினும்,

---

தங்கள் நூலை எழுதி வைத்துக்கொண்டு விவாகமாகாத பருவப்பெண் போல் பல வருஷகாலமாய் அச்சிடாமலே கிடப்போரும் சிலருண்டு. பாவம்!

அத்தொழில் முறைகளிலே முன்னவர் பிரயோகித்த மனோ முயற்சிகளையும், பிறவியில் அவருக்குப் பொருந்தித் தோன்றிய மதியூக நுட்பங்களையும், விவேக விசாலத்தையும் பின்னவர் பெறுதற்கில்லை. அவரவர்க்குப் பிறவியிலமைந்த தன்மைகள் அவரவரது சொந்த சொத்து. அவரே அதில் முதன்மை பெற்றவராய் விளங்குவார். அவரிடம் பயின்ற சீடரும், மாணவரும், மற்றுமுள்ளோரும் அவர் வழியில் அவரைப்போல அமைய முயற்சிக்கலாமேயன்றி—அவராகவே ஆகிவிட முடியாது. அந்தத் தலைமை "அவருடன்" போனது போனதே.

ஃ

இவ்விதமே, பிறவியிலமைந்த தன்மைகளுக்கேற்ப, ஒவ்வொருவரும் ஒவ்வொருவித குணங்கொண்டு நடக்கின்றனர். சிலர் தேவகுணத்தைப் பெற்று, என்றும் ஸாத்மீக ஸம்பன்னர்களாய்ப் பெருந்தன்மையோடும் விளங்குகின்றனர். பலர் இழிந்த சுபாவத்தைக் கைக்கொள்கின்றனர். எவ்வளவு செய்தும் நன்றியற்ற ஜென்மங்கள் சில உண்டு; எப்போதோ ஒரு உதவி செய்ய, அதைக் கால முற்றும் நினைத்து நடக்கும் விசுவாசிகளுமுண்டு. இதுவும் பிறவியின் தன்மையைச் சேர்ந்ததே. சிலருக்கு வருந்தி யுழைத்துத் தாம் தேடிய பணத்தில் உண்ண அவா. வேறு சிலருக்கோ சோம்பி யுட்கார்ந்து புசிக்க அவா. சிலர் எதையும் சுறுசுறுப்புடன் செய்வர். சிலர் மந்தத்தன்மையுடன் நடப்பர். சிலர் யானைப் பிறப்பு, சிங்கப் பிறப்பு, மான் பிறப்பு போலும் காணப்படுவர். யானை தான் துதிக்கையாலெடுத்த புல்லை அருகிலுள்ள பசுங்கன்று பிடுங்கிக்கொள்ளின், அதற்காகக் கோபம் கொள்ளாது அதை விட்டுவிட்டு வேறு புல்லை எடுத்துக்கொள்ளும். தான் உண்ணும் புல்லைத் தன்னுடன் பசு, ஆடு முதலியனவைகள் மேயினும் அதற்கும் இடம் கொடுத்து, அமைதியாய்த் தன் ஆகாரத்தைப் புசிக்கும். இத்தகைய கம்பீர குணத்துடன் நன்றி மறவாமையும் இருக்கின்றது. அத்துடன் பழிக்குப் பழி வாங்கும் குணமும் அதற்குண்டு. இந்த யானையின் சுபாவத்தைப் பெற்றவர்கள் அவ்விதமே கம்பீர குணத்துடன் பிரகாசிக்கிறார்கள். எவ்வளவு வறுமை நிலையிலும் தமது உயர்குணம் மாறுவதில்லை. சிங்கத்தினது சுபாவம் என்னவெனில், அது மிருகேந்திரனென்ற தலைமை ஸ்தானத்தை நிகரற்று வகிப்பதுடன், தனித்திருப்பதையே விசேஷமாகவும் விரும்புகின்றது. இந்த குணத்திலும் சிலர் இருக்கிறார்கள். இவர்கள் அதிகமாய்ப் பிறருடன் பழகுவதில்லை. வலிய வரினும் ஒவ்வொருவர் மீதும் ஒரு தோஷம் கற்பித்து விலகி விடுவர். அவர்களுடன் பழகுவதும்

---

அதிகாரம் செய்வது தன் மனைவியிடமே. தன் குமார்த்தி யிடமோ அந்தக் குழந்தை சொன்ன வேலைகளை யெல்லாம் தான் உட்பட்டுச் செய்ய வேண்டியதாயிருக்கும். புத்திரியிடம் அதிகாரம் செய்யப் புத்தி செல்லாது.

நேசிப்பதும் வெகு பிரயாசை எனினும், அன்னோரின் உயர் நலஞ் சார்ந்த குணங்களுக்காக அவர்களை எவரும் விரும்பவே நேர்கிறது. மான் அழகிய கண்களுடன் மிரண்ட பார்வையைப் பெற்றுள்ளது. எப்பொழுதும் அஞ்சுதலே அதற்கு இயல்பு. அத்துடன் காம நுகர்ச்சியும் அதற்கு அதிகம். இந்த இனத்தைச் சேர்ந்தோர் விசேஷித்த அழகும், சிற்றின்ப வாஞ்சையும் கொண்டு பயந்த ஸ்வ பாவத்துடனு மிருக்கின்றனர். ஃ

ஒரு பிரபல ஆசிரியர் தமது அரிய நூலில், பூனைப் பிறப்பு, மாட்டின் பிறப்பு, பெருச்சாளி—குரங்கு—நரி—நாய்—இவற்றின் பிறப்புகளுக்குள்ள குணங்களையும் சிலர் கொண்டிருந்ததாகக் கூறு கின்றார். சேர்க்கையில் ஆண் பூனைக்கு இடம் தராது பெண் பூனை எதிர்ப்பது அதன் சுபாவம். இரண்டுக்கும் சண்டை ஏற்பட்டே அந்தக் காமநுகர்ச்சி முடிகிறது. இவ்விதமும் சில பெண்களும் ஆண்களும் இருக்கிறார்கள். மாட்டைப்போல் ஓயாது உழைப்பதும் சிலரது தலையெழுத்து. பெருச்சாளியைப்போல் ஊராரின் சொத் துக்களைத் திருட்டுத்தனமாகச் சுரண்டி அதனாலேயே ஜீவிப்பவர்க ளும் இருக்கிறார்கள். சிலர் குரங்கைப்போல் ஒரு நிமிஷமும் சும்மா யிராமல் ஏதேனும் துடுக்குத்தன்மை செய்தவர்களா யிருக்கிறார்கள். ஏதேனும் கலகஞ் செய்யாமல் ஒரு தினத்தைப் போக்குவது அவர் களுக்கு வெகு கஷ்டம்! அவர்களின் புத்தியைத் திருத்தவும் முடி கிறதில்லை. கடியாரம் எப்படி ஓடுகிறதென்று அதை உடைத்துவிட் டுப் பார்ப்பார்கள். சிலர் நரியைப்போல கபடமும் தந்திரமு முள்ள வராவார். அதிக கபடத்திற்குத் தரித்திரமே முடிவு. படித்த வகுப் பினரிற் பெரும்பான்மையோரையும், பாமர வர்க்கத்தில் சிறு பான் மையோரையும் நரிப் பிறப்பில் சேர்க்க வேண்டியதே. நரியின் தன்மை தனது யுக்தி புத்திகளால் தீமை செய்வதே. படித்த வகுப் பினரில் ஒரு சாரார் இதில் முதன்மை பெற்றவரே. இவ்விதமின்றி, நன்மைக்கென்றே தமது யுக்தி புத்திகளை உபயோகிக்கும் கற்றோர் கள் பலர் இருப்பதால் தான் அவர்களின் வித்தைக்கு உலகமும் மரியாதை செய்கின்றது. நாயைப்போலக் குலைப்போரும், ஒரு அற்ப எலும்புக்கு அதைப்போல் சண்டையிடுவோரும், தம் ஜாதி யையே பகைப்போரும், நாய்க்கு வேலையில்லை—நிற்க நேரமில்லை யென்பதுபோல் வீணில் திரிந்து கண்டபடி அலைவோரும், நாய்க்கு மலம் தின்பதே நினைவு என்பதாய் இழிந்த சுபாவத்திலேயே செல் வோரும், நாய் தான் கக்கியதையே யுண்ணும் ஆபாசத் தன்மை யைபோல் கேடு கெட்ட எச்சில் தன்மையாய் நடந்துகொள்வோரும் பலர் இருக்கிறார்கள். ஃ

---

வீடு நிலங்கள் இருந்து என்ன செய்ய? மனதில் சந்தோஷமில்லாவிட் டால்?—மக்களில்லா விட்டால்?— மக்கள் மீதே பகை வந்துவிட்டால்?

பிறரை வஞ்சிப்பதும், மோசம் செய்வதுமே பிறவித்தன்மையாகக் கொண்டவன் பிற்காலத்தில் என்ன உயரிய வாழ்விலிருந்த போதிலும், தன் இழிந்த பழய குணத்தை அவன் விடுவதில்லை. இத்தகையோரது பெரிய அந்தஸ்தையும், அவர்களின் கனத்த வியாபாரத்தையும், உத்தியோக பதவியையும் கண்டு மயங்கி நம்பி மோசம் போனவர்கள் எண்ணிலர். ஒருவன் மகா சாஸ்திரக்ஞனாகவோ, வேதாந்தியாகவோ, மடாதிபதியாகவோ, வித்வானாகவோ இருக்கிறான். ஆயினும், அவனது உள் தத்துவத்திலோ, அதாவது பிறவித்தன்மையிலோ கற்பழித்தலான சண்டாளத்தனங்களும், அளவு கடந்த சிற்றின்ப வாஞ்சையும், மிதம் மீறிய விபசாரமும் மேலாடி நின்று, அவற்றிற்கே அவன் இரையாகிறான். சிலர் பெரிய சீமான்களாயிருந்தும் அவர்களின் பிறவிக்குணம் அற்ப தன்மையதாகவே முடிகின்றது. சிலர் லோபி, சிலர் கருமி, சிலர் முன் கோபி, சிலர் ஆத்திரகுண முடையவர்கள், சிலர் அவசர புத்திக்காரர்கள், சிலர் பின்புத்தியினர்—இவை யாவும் பிறவியில் அமைந்த தன்மைகளைப் பொறுத்தனவே. எளியவனாயினும் பெருந்தன்மையான நினைவுகளுடன் கூடிக் கம்பீரமாய் சத்யவந்தனாய் விளங்குகிறான். இதுவும் பிறவித்தன்மையின் ஒரு செயலே. சிலர் எப்பொழுதும் தாராளமாய்ச் செலவிட்டுக்கொண்டு, வரும் விருந்துகளை யேற்று உபசரித்துக் கௌரவமான நிலையிலிருக்கிறார்கள். இவர்கள் தனவந்தர்களாயில்லாமல் சாமான்ய நிலையிலேயே இருப்பினும், அவர்களின் தாராள சிந்தை கொண்டாடத் தக்கதாயுள்ளது. சிலர் அன்புக்குமட்டுந் தலைவணங்கி, மற்றவரிடம் நிமிர்ந்த நிலையிலேயே உள்ளார். எனினும் அகம்பாவமில்லை; தூயமனமே படைத்துள்ளார். இதுவும் பிறவியில் அமைந்த குணமே. சிலர் எப்பொழுதும் அழுக்கு வஸ்திரங்களையே யுடுத்தி நிற்க, வேறு சிலர் ஒரே வேஷ்டியாயினும் துவைத்துக்கட்டிச் சுசீலமாயுள்ளார். சிலர் துடுக்காகவும், முறடாகவும், வேறு சிலர் சகிப்புள்ளவர்களாயும் காணப்படுகின்றனர். சிலருக்கு மோசம் செய்வதே நினைவு; அகப்பட்டதைச் சுருட்டிக்கொண்டு போகவே எண்ணம்; ஏமாற்றி வஞ்சிப்பதிலேயே புத்தி; எதையும் பிச்சையாகவோ, இரவலாகவோ பெற்றுத் தமது காசைச் செலவிடாதிருக்கவே நோக்கு; ஒரு சிலருக்கு ஒண்டியாயிருந்து யாவற்றையும் ஒருமிக்க விழுங்கி யுண்ணப் பிரியம்; மற்றும் சிலருக்கோ தமக்குக் கிடைத்தது சொற்பமாயினும், அதைப் பிறருக்குப் பங்கிட்டு எஞ்சியதைக் கூடி யுண்ணுவதிலேயே

---

தன் கணவனை அதிகாரம் செய்வதெல்லாம் அவன் குடும்பத்தின் மீது அதிகமான பாசம் வைத்திருக்கிறானென்று எண்ணுவதால் தான். அவன் யாவற்றையும் உதறிவிட்டுச்சென்று விடுவானாகில் அநேக மூர்க்க குணமுள்ள மாதர்கள் அடங்கி விடுதல் கூடும். அவன் அப்படிச் செய்யப் பின்னடைவது மாசற்ற மக்கள் பாசத்தாலேயே; மனைவியின் மீதுள்ள மோகத்தாலல்லவாம்

திருப்தி. இவை யாவும் பிறவியில் அமைந்த தன்மைகளே. "நட்பும், தயையும், கோடையும் பிறவிக்குணம்'' என்றார் ஔவையார். பிறவியில் அமைந்த தன்மைகள் சிறுபோதிலேயே விளங்கிவிடும். சந்தித்த இருவரது பிறவிக்குணமும் ஒத்திருப்பின் அன்னோரின் நட்பும் உறவும் நீடிக்கும். இருவருள்ளும் பிறவித்தன்மை வேறுபட்டுக் காணின் விரைவில் பிரிந்து விடுவர். அந்தந்த ஜாதியைப் பொறுத்தும் சில பிறவிக்குணங்கள் இயற்கையில் அமைவதுண்டாதலால் தான், கணவனும் மனைவியும் ஒத்திருக்கவேண்டி "குரங்காயினும் குலத்திற் கொள்'' என்றார் பெரியோர். பிறவியில் அமைந்த தன்மைகளைப்பற்றி இன்னும் எவ்வளவோ பேசலாம். இடமில்லையே!

## "உரிமையாகிய தந்தை தாயாரை உயிருடன் பிரிவுற்றனன்.''

தந்தையின் அன்பு தன் தாய் கண்மூடி அவர் மறுதாரங் கொண்டவுடன் தொலைகின்றது. தன் மீது பகை சாதிக்கும் தந்தையை எவ்வளவு அன்புகாட்டி நேசிப்பினும் வசப்படுத்த முடிகிறதில்லை. அவர் அன்னியரேபோல் ஆகிறார். இவ்விதமே, தன் சகோதரர்களிடமோ, தனது பெண்ணின் வயிற்றுக் குழந்தைகளிடமோ அன்பு முற்றிப் போய், அவர்களின் க்ஷேமத்தையே கவனித்துத் தன்னை விலக்கிவிடுகிற தாயாரிடமும் பழய அன்பைப் பெற முடிகிறதில்லை. மருகி மீதுள்ள துவேஷத்தால் தன்மீது பகை சாதிக்கும் அன்னையின் மனத்தை நல்ல மனதாகத் திருப்பவும் ஆகிறதில்லை. அந்த அன்னையும் தன் குடும்பத்துக்கும் தனக்கும் எவ்வளவோ உழைத்துள்ள குமாரனிடம் எள்ளத்தனையும் அன்பின்றிப் பாம துரோகியாகிறாள். இவ்வாறு தந்தை தாயாரை உயிருடன் பறிகொடுத்தவன் அழுது புலம்பிக் கடவுளையே கதியாக அடைய நேர்கிறது. எந்த நிமிஷத்திலும் இவன் தன் தந்தை தாயாரோடு சேர்ந்து கொள்ளத் தயாராயிருப்பினும், அதற்கு ஆவலுடன் காத்திருப்பினும் அவர்கள் எப்போதுமே துவேஷமனமாகி இவனைச் சேர்ப்பதேயில்லை. திக்கற்றவனுக்குத் தெய்வமே துணை.

ஆண் குழந்தைகளைப் பெற்றதைவிட, ஒரு பெண் குழந்தையைப் பெற்றிருந்தால், மனைவி யில்லாத நேரத்தில் தன் பசிக்கு வேண்டிய உணவை அவள் சமைத்துப் போட முடியும். ஆனால், மாப்பிள்ளை தேடும் கவலையோ-?

# எமாறாதே—நிதானி.

அவரவர் குணம், மாறும் மாதிரி தெரிந்திடு.
நல்லாரோ, நயவஞ்சகரோ, சுய நலமேயோ?
நீ எண்ணிய அதை—அவர் அறியவிடாதே.
அன்பு வழி ஆகுக; அவரும் ஆகிறாரா பார்.

பேச்சில் மயங்கி தந்து இழந்து ஏங்காதே.
வந்தவர் விருந்துண்டு எகுவர்; துணையாகார்.
நின் தவிப்பை ஏன் அங்குகூற? பயன் யாதோ
உன் தலைச்சுமை உனக்கே; பிறர் தாங்கார்.

கோப வேளையில்
எது நேருமோ?
துடிக்கும் மனம்
எதை இடிக்குமோ
ஆத்திரச் சொல்
கேட்டு எதிலே
தாவி விடுமோ?
உனை மிக அடக்கி
பழி-தீங்கு-நீ-ஒழி.
எதிர்த்தவரை
நெஞ்சினில் வை.

உலகில் உண்மை சிறிது; எங்கும் கபடவலையே
அன்பு நாம் காட்டினும் மற்றவர் காட்டிடார்.
கிடைத்தது பறித்தே தம் லாபம் காண்பார்.
துரோகம் செய்யேன் என்பவரே செய்வார்.
உன் மக்களைப் பிறர் எச-வீச இடமே தராதே.
அதிகம் பேசல், மிகமிக வருதல் எமாற்றவே.
மனதோடு மனம் கவர நிற்பார் அரிதானோர்.
சந்தேக நெஞ்சு கபடம் அறிந்து தப்பிவிடும்.
நம்பிய நெஞ்சு நம்பி நம்பி படுகுழியில் விழும்.
உன் இழிநிலை-வரவு-இருப்பு-செலவு-மறைத்திடு.
இணங்குமுன் நன்கு யோசி; உறுதிதர நிதானி.

---

உடனே செய்ய-பேச-வந்ததில் சற்று தாமதி.
கையெழுத்து இட மறு. அது உன் ஆஸ்தி.

நஞ்சு நெஞ்சின் தீது பகை நாளில் வெளிவரும்
நேசம் உறவு சரி; பிணிபாடுகளில் மறைவார்.
உன் கூட்டம் பெரிதே. உன் நற்றுணை யார்?
தானே வலைப்படு மானே போல் நீ ஆகாதே.

# விஷச்சொல்லின் விபரீதங்கள்.



விஷச் சொற்களின் விபரீதங்களை விளம்பவும் கூடுமோ? சிலரது வாயிலிருந்து புறப்படும் வார்த்தைகள் விஷத்தன்மையுடனேயே விளங்குகின்றது. இன்னும் சிலர் கூறும் வார்த்தைகள் எவ்விதமோ விஷச்சொற்களாக மாறி விடுகின்றன. தாங்கள் பேசும் சொற்களின் தீமையை உணராமலும், அவற்றின் கூர்மை இத்தகையது என்பதை அறியாமலும், அவர்கள் உச்சரிப்பர். அறியாமையும், பழக்கத்தின் கொடுமையுமே இதற்கு முக்கிய காரணமாகும். தன் குழந்தையின் முறட்டுப் பிடிவாதத்தை அடக்கும் வழிதெரியாத தாய்மார்களில் சிலர் "நாசமாகப் போக" "பாம்புகடிக்க" "பேதியிலே போக" என்ற விஷமான சொற்களால் குழந்தைகளைத் திட்டி விடுகின்றனர். அதனால் அக்குழந்தையின் முறட்டுப் பிடிவாதம் நீங்கி விடுகின்றதா? இல்லை: தங்களின் ஆத்திரத்தை அடக்கும்வழி அறியாதவர்களே இங்ஙனம் கூசாது பேசி விடுவர். அவை சாதாரணமாகப் போகாமல் சில சமயங்களில் பலித்தும் விடுகின்றன. மறுநாட் காலையில் தங்கள் குழந்தை சிறிது நோய் கொண்டு படுத்தாலும், அல்லது இருமுறை வயிற்றுப்போக்கு ஏற்பட்டுவிடினும் தன் சொல்தான் பலித்து விட்டதோ என்று அத்தாய் பரிதவிக்கிருள். வைத்தியன் வீட்டுக்கும் ஓடுகிருள்; குல தெய்வங்களையும் வேண்டுகின்ருள். குழந்தை பிழைத்தால் தான் உண்டு; இல்லாவிடில் அந்த நச்சுச் சொல்லைக் கொடிய நாகத்தின் கடு விஷத்திற்கு ஒப்பிடலாமல்லவா?

ஃ

ஒன்றுமில்லா அற்ப விஷயங்களுக்கெல்லாம் "ஐயோ" என்று சத்தம் போடுவர் சிலர். ஏதோ பெரியபிரமாதமான விஷயம் எனப் பலர் சந்தேகப்படும்படி அது இருக்கும். ஆயிரக்கணக்கான ரூபாய்கள் வாரி இறைக்கப்பட்டு நடைபெறும் விவாக வீட்டில் ஒரு காலணு காணுமல் போனுல் இந்த "ஐயோ" சத்தக்காரர்கள் அழுது ஆள் கூட்டம் கூடி அமர்க்களப் படுத்தி விடுவர். விவாக வீடுகளிலும், சுபகாரியங்கள் நடைபெறுமிடங்களிலும் "ஐயோ" சத்தம் கூடாதே என்ற ஞானம் இவர்களுக்குக் கிடையாது.

ஃ

சிலர் உத்தமர்களாயிருந்தும் கூட அவர்களின் வாயில் கெட்டதும், ஆபாசமுமான வார்த்தைகள் தங்கு தடையின்றிப் புறப்படும். அவைகள் கொடிய விஷத்தன்மை பொருந்தியதாகவே இருக்கும். இத்தகைய சுபாவ குணமுள்ளோர் திருந்துவது கடினம். சில சமயம் நம்மை நன்கு மதிக்கும் மனிதர்களிடையே தங்கள் சுபாவமான பேச்சைத் தொடங்கி விடுவர். அந்த மனிதர்களோ இத்தகைய விஷச் சொல்லுக்கு வருந்துவதுடன், இத்தகையவர்களுடன் நட்பு கொண்ட நம்மையும் கேவலமாகக் கருதுவர். விஷச் சொல்லின் கூர்மைக்கு நிகர் ஒன்றுமில்லை.

---

அதிகமாகக் கற்று விட்ட சில பெண்மணிகள் தங்களின் பூர்வ குலாசாரங்களை மறந்து புது விதமாய் வெளிப்படுகிருர்கள். அது பெண்மைக்கு அழகு தருவதாகவுமில்லை. ஆடவர்கூட்டம் "கண்" போடவும் நேர்கிறது!

"இந்தக் காரியமாவது நடக்கிறதா வது, எல்லாம் நாலு நாள் சங்கதி" என்று கூறுகிற சில விஷப்பல்லு களின் வாக்குப் பலித்துப் போய் அக்காரியங்கள் விக்கினமாகவே போனதை நான் கண்டிருக்கிறேன். "கடைவைத்து வியாபாரம் செய்ய லாமா" என்று ஒருவரை ஆலோசிக் கப் போனசமயம்" நீ கடை வைத்து முன்னுக்கு வருவது கஷ்டம்" என ஒருவர் கூற, அந்த மனிதன் கடை வைத்து அதில் பட்ட கடனுக்குக் காராக்கிரஹம் போகும் காலமும் நேர்ந்தது. சண்டை சச்சரவு நடை பெறுங்காலத்து மகா கொடிய விஷச் சொற்கள் புறப்பட்டு விடும். "இன் னும் எட்டு நாளில் நீ மண்ணாகி விடு வாய்" என்று மண்ணை வாரித் தூற்ற, அவ்விதத் தூற்றலுக் காளானவர்கள் அந்த வார்த்தை பலித்துவிடக் கூடிய நிலையை விரைவில் அடைகின்றனர். "தலையில் இடி விழ" என்றது போ ன்ற மொழிகளைக் கூறுவோர் மகா கொடிய விஷப் பாம்புகளாவர். அவர் கள் வார்த்தையும் பலித்து விடலாம். இத்தகையோரைக் கண்டதும் நல்ல பாம்பைக் கண்டு ஓடுவதுபோல் மறை வதே உத்தமம். சண்டையில் மகன் தந்தை என்று கூட மதியாது பேசி விடுவதும், தந்தை மகனைச் "சாக," "வேக," "போக" என்று தூற்று வதும், பிறகு அச்சொல் பலித்துத் தந்தை மகனைப் பறிகொடுத்துப் பரி தபித்து நிற்பதும் சில இடங்களில் நடைபெறும் சங்கதியே தான். அதிர் ஷ்டத்தை எதிர்நோக்கிச் சில வேலை களைத் தொடங்குகையில் "உன் அதி ர்ஷ்டம்தெரியாதா?'பினாங்கி' தான்" என்று கூறுபவர்களும் விஷப்பூச்சிக் கூட்டத்தாரே யாவர்.

ஃ

ஒரு வேலையாகப் புறப்பட்டுப் போகையில் "எங்கே? என்ன? எதற் காக? என்பது போன்ற கேள்வி களைக் கேட்பதைப் பலரும் தடை படுத்தும் விஷச் சொற்களாகவே கருதி விடுகின்றனர். பிறரது சந்தர்ப் பம் சமயம் அறிந்து கொள்ளாது விஷச் சொல்லைக் கூறிப் பிறகு மனம் வருந்துவதும் உண்டு. அவ்விஷச் சொல்லால் காரியங்கள் விக்கினமாகி, வியாகூலம் கொண்டு, மனப்புண் அடைந்த சமயங்கள் எத்தனை எத்த னையோ! கலியாணத்திற்காக ஒருவன் நகையை விலைக்கு வாங்குகிறான். அந்த நகை சற்று மோசமுள்ளதாக மற்றொருவனுக்குப்படும்போது அவன் "நகை வேண்டாம்" என்று இடை மறிக்கின்றான். நகை வாங்குபவனோ "என்னடா! விவாகத்திற்கு முதல் முதலாக நகை வாங்கும்போது இப் படித் தரித்திரமாய்ச் சொல்கிறானே என்று மனம் வருந்துகிறான். இவன் சொல்லித் தடுத்தது நல்ல எண்ணத் துடன் கூடியதானாலும், சொல்லை உப யோகப்படுத்திய காலமும் போக்கும் எப்படியோ விஷத்தன்மையை உண் டாக்கி விடுகிறது. இவ்விதமின்றி, "இந்த நகை விஷயமாக உன்னிடம் தனித்து ஒரு வார்த்தை சொல்ல வேண்டும்" என்று கூறி இருப்பானா கில், அது எவ்வளவு அழகாயும், ரம்மியமாயும் போகும்? இவ்விதம் எதையும் யோசித்துப் பேசத் தவறி விடுவதால் நேரிடும் அபாயங் கள் அநேகம். தன்னை யறியாமலே விஷச்சொற்கள் புறப்பட்டு விடுவது முண்டு.

ஃ

இதுவரை கூறி வந்தது போன் ற விஷயங்கள் நேருக்குநேராயும் மனி தர்களிடையேயும் நடைபெறுவதாக இருக்க, தன்னந் தனியே ஆலோசனை யின் காலத்தும், சில முக்கிய காரியங் களை நினைத்துக் கொண்டு செல்லும் மார்க்கத்திலும் சில விஷச்சொற்கள் நமது விஷயத்திற்கு அநுகுணமாய்

நேரிடுவதும் உண்டு. இதை "அசரீரி வாக்கு" என்பர் பெரியோர். உதாரணமாக, நாம் ஒருவரைப் பார்ப்பதற்குப் புறப்பட்டுப் போகிறோம். அந்த சமயம் தெருவில் செல்லும் இருவரில் ஒருவன் மற்றவனைப் பார்த்து, "நான் பார்த்துவரச் சொன்னேனே; அது என்ன ஆயிற்று?" என்று கேட்க, மற்றவனோ "அந்த ஆள் ஊரிலில்லை" என்று மறுமொழிகூறுகிறான். நம்காரியத்திற்குத் தடங்கலான விஷச்சொல்லாகவே அது ஆகிவிடுகிறது. மீறிச் சென்று பார்க்குங் காலத்து நாம் தேடிப்போன மனிதன் அப்பொழுதுதான் ரயிலுக்குப் புறப்பட்டுப் போனதாகக் கூறுகிறார்கள். வீட்டில் ஒருவர் நோயுடன் கிடக்க, மருந்து வாங்கி வரும் சமயத்தில், ஒரு மாட்டின் விஷயமாகப் பேசிக் கொள்ளும் இருவர்களில் ஒருவன் "மாடு பிழைப்பது கடினம்" என்கிறான். மருந்து வாங்கிச் செல்பவன் "ஐயோ! மாட்டுக்குக் கூறிய வார்த்தை மனிதனுக்கும் நேரிட்டால் யாது செய்வது என்று நினைத்துத் தவிக்கின்றான். இத்தகைய வார்த்தைகளை "அசரீரி வாக்காக எழுந்த விஷச்சொல்" எனலாம். கெட்ட காலங்களுக்கேற்ப அவை இயற்கையாகவே எழுகின்றன என்பதையும், அது ஈசனார் வாக்கு என்பதையும் நாம் அறியக்கிடக்கின்றது.

ஃ

படபடப்பினாலோ, கோபத்தினாலோ, பழக்கத்தினாலோ, சமயமறிந்து பேசத் தெரியாத்தன்மைக் குறைவினாலோ விஷச்சொற்களை உபயோகித்து விடுவதில் அவை அபாயத்தையும்,கனத்தஸஞ்சலத்தையும் விளைப்பதற்குஏதுவாகிவிடுகின்றன. இத்தகைய விஷமான சொல், பார்வை, முதலியவற்றைக் கருதியே, எல்லாம் அறிந்த முன்னோர்கள் "சகுன சாஸ்திரம்", என ஒன்றை ஏற்படுத்தினர் போலும்.

பண்டிட் K. விஜயராகவ அய்யங்கார்

ஸ்ரீரங்கம்.

ஃ

["மனைவிக்குப் பிரஸவ ஜன்னி, உடனே வா" என்று ஒருவனுக்குத் தந்தி வருகிறது. அதைப் பெற்று ஒருவன் கலங்கும் வேளையில் மற்றொருவன் அங்கு வந்து உட்கார்ந்து தன் மனைவி செய்யும் நிஷ்டூரங்களையெல்லாம் சொல்லத் தொடங்குகிறான். அதற்கு முன்னவன் "கொஞ்சம் பொறுத்துக் கொண்டு போ" என்று சமாதானம் கூறுகிறான். அதற்கு மற்றொருவன் "என்னைப் போல நீயும் இரண்டாந்தாரங் கட்டி வாழ்ந்தாயானால் அப்போது தான் என் பாடுகள் உனக்குத் தெரியும்"—என்று கூறுகிறான். இந்தச் சொல் விஷவார்த்தையாக முன்னவன் மனதிற்பட்டு, தனக்கு வந்திருக்கிற தந்தியின் சங்கதியையும், அதற்குள் இவன் தனக்கு இரண்டாந்தாரப் பேச்சை எடுப்பதையும் ஒத்துப் பார்த்துத்திடுக்கிடுகிறான், தன் மனைவி பிழைப்பாளோ இல்லையோவென்றும் ஏங்குகிறான். இது எதிர்பாராது நேர்ந்த விஷச்சொல்லாகும். இவ்விதமே, ஒருதினசரிப் பத்திரிகையின் உதவி ஆசிரியர் சம்பளம் போதாதென்று விலகிவிட நினைத்திருக்கையில், அன்று வெளியான தினசரியை யொருவன் வாசித்துக் கொண்டிருந்த ஆநந்தத்தில் இவரைத் தற்செயலாகக் கண்டு, எல்லாம் அவர் எழுதியதே என்ற பரவசத்தில்-"நீங்

மனைவி யிருக்கையில் வீட்டின் கவலையே தனக்கு இல்லை. அவள் தாய வீடு சென்ற சமயமோ புசிப்பு முதல் எல்லாக் கவலைகளும் கூடிக் கொள்கின்றன. ஹோட்டலில் புசிப்பு. திண்ணையில் தூக்கம். நண்பரிடம் பேச்சு!

களும் இந்தத் தினசரி ஒன்றை ஒரு அணுவுக்கு வாங்கிக் கொள்கிறது தானே"—என்ற பரிகாசமாய் உரைக்கின்றான். அது விலக நினைத்துள்ள உதவி ஆசிரியருக்குச் சுருக்கென்று பட்டு, தான் விலகி விட்டால் மற்றவர்களைப் போலத் தானும் ஒரு அணு விலை கொடுத்துத்தான் வாங்க வேண்டியிருக்குமோ என்று வியாகூலமடைகிறார். சாதாரணமாகப் பேசும் வார்த்தைகள் கூட இவ்விதமாய் விஷச் சொற்களாக எவ்விதமோ ஆகிவிடும். ஒருவன் நாளை காலை எவ்விதமும் ஊருக்குக் கட்டாயம் போகவேண்டுமென்கிறான். அருகிலுள்ளவன் "இந்த இரவு உனக்குக் காய்ச்சல் வந்து விட்டால் நாளைபோக முடியுமா ? வந்தது வந்தாய், இன்னும் இரண்டு நாள் தங்கிப் போ" என்கிறான். அன்றிரவே அவனுக்குக் காய்ச்சல் வந்து மறுநாட் பிரயாணமும் தடைபடுகிறது. "நாடகாபிமானி" என்ற பத்திரிகைக்கு அதன் ஆறுவது மாத வாழ்த்தாக ஒரு விருத்தம் பிரசுரிக்கப்பட்டிருந்தது. அதன் முடிவில் "நாலிரண்டு மாதம் நாடகாபிமானிக்கே" என்றிருந்தது. அந்தப் பத்திரிகைக்கே நாலிரண்டு மாதம் தானா ஆயுள் ; அதற்குப் பிறகு இல்லையா என்று பலரும் நினைப்பாராயினர். அவ்விதமே ஆறு மாதத்துடன் அப்பத்திரிகையும் மறைந்தது. "என் வாழ்வு நாள் இதே" என்றொருவர் பாடினார். அவரது வாழ்வு நாளும் அவ்வளவோடு முடிந்து விட்டது. எல்லாச் சொத்துக்களுடன் நல்ல வாழ்வி லிருக்கையிலேயே ஒருவர்—"ஆருந் துணை காணேன், அவனியில் அலங்கோலமானேன்" என்று பாடினார். அவ்வண்ணமே பிறகு அவர் திக்கற்று நடு வீதி வாழ்வுக்கு வந்து விட்டார். தன் தமக்கை இறந்ததற்கு ஒருவர் செய்த பாடலில் "எனதருமைச் சோதரீ ! நல் விதி இருந்தென்னுடன் நீ வாழ்பெறிலையால்—இவை யாவும் வீணே வீணே" என்று தன் தமக்கையில்லாத மற்ற பாக்கியங்கள் வீணானதே என்று குறிப்பிட்டார். அந்த "வீணே" என்ற வார்த்தை பலித்து அவரது பாக்கியங்களெல்லாம் விலகியோடி விடத் திகைப்பதானார். தம் இளைய பெண் இறந்ததாக ஒருவர் கடிதம் எழுத, மூத்த பெண் இறந்ததாக நினைத்துத் தவறுதலாய் வாசித்து விட்டு, மூத்த பெண் மரித்ததற்கு வருந்துவதாய்க் கடிதம் எழுதினார். அதைப் பெற்றவர் திடுக்கிட, அடுத்தவாரம் நோய் வாய்ப்பட்டிருந்த மூத்த பெண்ணும் முடிந்து போனாள். அளித்தல் என்பதற்குப் பதிலாக அழித்தல் என எழுதி விடுவதும், வேண்டும் என்பதற்குப் பதிலாக வேண்டாம் என்று தெரியாமலே வரைந்து விடுவதுமான இன்னும் எத்தனையோ விஷச் சொற்களையும் குறிப்பிடலாம். இவ்வாறாக, விஷச் சொற்களாய் முடிவது அவரவர் வேளைப் பிசகே. அவற்றை முன்பின் எண்ணாத ஒரு தெய்வ சங்கல்பமாகவும்பேசலாம். விதி வழி மதி. ப——ர்.]

---

பணம் திரட்ட வேண்டியதுதான். அத்துடன் பணத்தை எதிர்பாராமலே பிறருக்கு உதவவும், கூலிபெறாமல் அவர்களுக்குக் காலசகாயமாய் உழைக்கவும் வேண்டும். இதற்கு வட்டியும் முதலும் சேர்த்துக் கடவுள் நமக்குப் பிறகு பங்கிடுவார். இட்டுக் கெடினும் மறுபக்கம் புதுவாழ்வு விரைவில் வரும்.

---

அதிர்ஷ்டமிருந்தால் கால் நொண்டியா யிருப்பவளுக்குங் கூடக் கல்யாணம் நடந்து விடுகிறது. அதிர்ஷ்டமற்றவர் எவ்வளவு அழகாயிருப்பினும் விவாகம் கூடாமல் வருஷங்கள் நெடுகப் போய்க் கொண்டே யிருக்கின்றன.




1. எவ்வளவோ செயற்கை யலங்காரங்களால் தம்மை யொரு வாலிபனைப் போலத் தோற்றச் செய்வதாக நம்பிக் களிப்பெய்துகிறார்கள். ஆனால் நரை திரை பொருந்திய கிழத்தன்மையை மறைக்க முடிகிறதா? கிழவருக்குத் தான் மீசையைச் சிங்காரிக்கும் வேலை அதிகமாம்.

2. நம் அன்பிற்குரியவர், நமது க்ஷேமாபிவிருத்தியில் பெரிதும் கவலை கொண்டவர் இறந்துவிடின் நமக்கு இவ்வுலகமே வெற்று வீடாம்.

3. குடும்பத்தை உன்னத நிலைக்குக் கொண்டு வந்த வீட்டுக்காரன் கண்ணை மூடிக் கொண்டால் அக் குடும்பத்தினருள் சிலர் துயருறுவதே யில்லை. நமக்கு என்ன குறைவு என்று நினைத்துக்கொள்ளுகிறார்கள்.

4. புதிதாய் வந்த ஆசைக்கண்ணாட்டியின் அழகிலும் பேச்சிலும் ஒய்யார நடையிலும் அடிப்பட்டு மயங்கி தாய் தந்தையரை வீட்டை விட்டு வெளியே துரத்தும் பாவிகளின் வாழ்வைக் கடவுள் சஞ்சலப் படுத்தி விடுகிறார்.

5. மஞ்சட் காமாலைக்காரனுக்கு எப்பொருளும் மஞ்சள் நிறமாய்க் காணப்படுவது போல் சந்தேகப் பிராணிகளுக்கு எல்லாம் சந்தேக மாகவே தோற்றுகின்றது.

6. ஒருகுடும்பத்தின் செல்வவிருத்தியும் ஓங்குகையும் வாழ்வும் பேரும் எல்லாமுமே முக்கியமான மனிதன் இறந்ததும் அடியோடு மறைந்து விடுகின்றது.

7. விவேகத்தோடு வாழும் பெண்கள் பணங்காசை எதிர்பார்ப்பதில்லை. குடிசையில் வாழினும் கூழைக் குடிப்பினும் ஆத்ம நேசரான பிராணபதியின் அன்பொன்றையே கோருகிறார்கள்.

8. வெற்றிலைக்குத் தடவி மீந்த சுண்ணாம்பைச்சுவரிலும், மேசை நாற்காலிகளிலும் தேய்த்து விடுகிறார்கள். அதைக் கண்டிப்பினோ சீறிவிழுகிறார்கள். அவர்கள் தப்பு அவர்களுக்கே தெரிவதில்லை.

9. உத்தியோகத்தில் அமர்ந்ததும் பழயசாதத்தின் உறவை மறந்து நாகரீக ஆகார பானங்களில் நாட்டம் செலுத்துகிறார்கள். மேலும், "பழய சாதம் உடம்புக்கு ஆகாது" என்று பிறருக்குப் புத்தியும் புகட்டுகிறார்கள்.

10. அன்பர்கள் சுவாமியின் அபிஷேகத்திற்கென அளிக்கும் பால், தயிர், நெய் முதலிய அபிஷேக திரவியங்களைக் களவாடி விக்கிரகத்தின் பின்னால் மறைத்து வைத்திருந்து பிறகு தங்கள் உபயோகத்துக்கு எடுத்துக் கொள்ளுகிறார்கள். இதனாலேயே 'கோவிற் பூனை தேவர்களுக்கஞ்சா' தெனக் கூறுகிறார்கள் போலும்!

11. மூடத்தனமான சந்தோஷத்தில் மடமடவென வார்த்தைகளை வெளியே கொட்டி விட்டு பின்பு என் சொன்னோம் என்று கவலைப்படுகிறார்கள். பேசு முன் கொஞ்சம் யோசித்திருக்கலாகாதா?

12. வீட்டுக்காரன் எவ்வளவு செய்தாலும், எத்தனை வருடங்கள் ஆதரித்துக்காத்தாலும் அவனை பாமலோபி, பிசினாரியென்றே சொல்லுகிறார்கள். இவர்கள் மனம் என்று தான் திருப்தியடையுமோ? த. சு. சங்கரலிங்கம்.

# எந்த நெஞ்சு உடனே உதவி செய்யத் தூண்டும்?



உன்னத பதவியிலுள்ள ஒரு பெரியார் தன் நண்பருக்கு உதவி செய்யுமாறு மற்றொருவருக்குக் கடிதம் எழுதுகிறார். "எனது நண்பர் தங்களிடம் சில விஷயங்கள் தெரிவிப்பார்; அப்பால் அவசியம் நேரிட்டால் தங்களின் உதவியை நாடி வருவார்; அப்பொழுது தங்களால் கூடியவரையில் வஞ்சனையில்லாமல் திரிகரண சுத்தியாய் உதவி செய்யுமாறு வேண்டிக்கொள்ளுகிறேன்; அவருக்குத் தாங்கள் செய்யும் உதவியை எனக்கு நேரில் செய்ததாகக் கருதித் தங்களுக்கு அதற்காக நான் நன்றி பாராட்டக் கடமைப்பட்டவனாவேன்; இவ்விஷயத்தில் தாங்கள் சிரமமெனக் கருதாது அவசியம் வேண்டும் உதவிகளைத் திட்டமாய்ச் செய்வீர்களென்ற முழு நம்பிக்கையுடன் தங்களுக்கு இக்கடிதம் எழுதி யிருக்கிறேன்" என்று அக்கடிதத்தில் குறிப்பிடுகிறார்.

ஃ

இக்கடிதம் பெற்ற மற்றவரோ இதில்தமக்கு ஒருலாபமுமில்லை யென்றும், வீண் தொல்லைச் சங்கதியென்றும், அனாவசியமான பிரயாசையென்றும் மனதில் எண்ணிக்கொண்டு, தமக்குப் பல ஜோலிகள் இருப்பதால் இச்சமயம் தாம் வாக்காலோ சரீரத்தாலோ எவ்வுதவியும் செய்ய சமயப்படவில்லை யென்றும் சொல்லி மெதுவாக நழுவிக்கொள்கிறார். இத்தகையோர் தங்களுடைய —சொந்த காரியங்களுக்கும், அதனால் உண்டாகும் அனுகூலங்களுக்கும் மட்டுமே அந்தப் பெரியாரை நேசிப்பவர்களாதலின், அவர் அவ்வளவு தூரம் வேண்டிக்கொண்டிருந்தும் மெதுவாக ஒதுங்கிக் கொள்கிறார்கள். அக்கடிதத்திலேயே இவர்களுக்கும் சிறிது பண வருமானலாபம் வைத்து எழுதியிருப்பின் உடனே உற்சாகத்துடன் தயாராகி விடுவார்கள். இது காரியவாதிகளின் சங்கதி. உண்மையாக அன்பு மிகுந்து நிற்போர் இக்கடிதத்தைப் பெறுவாராகில், ஒவ்வொரு சொல்லுக்கும் நூறு அர்த்தம் செய்து கொண்டு தங்களின் பிராணனையே அந்தப் பெரியாரின் நிமித்தமாக அவரது நண்பருக்குக் கொடுக்க உடனே சித்தமாய் விடுவார்கள். நம்மையும் ஒரு பொருட்டாக மதித்துக் கடிதம் எழுதினார்களே யென்று ஆனந்தத்தோடும் துள்ளிக் குதித்து உதவி செய்ய முன் வருவார்கள். தங்களுக்கு எவ்வளவு வேலை யிருப்பினும் அதைப் பொருட் செய்யார்.

ஃ

ஒருவரை யொருவர் நம்பி மதிப்பதில் மூன்று விதங்களுண்டு. (1) அந்த மனுஷ்யருக்காகவே அவர்மீது ஆழ்ந்த அன்பு வைத்து அவரைப்

---

தமக்கு எந்தச் சோதனையும் நேரிடாதெனக்கொண்டு சுகவாழ்விலிருந்து பிறரை அந்நியராக்கி விலகுவோர் சீக்கிரகாலத்தில் தானே தம் செயலின் எதிரொலியைக் காண்பர், கண்டு மிருக்கிறார்கள் வெகு பேர்!

பார்த்துக்கொண்டிருந்தாலே போது மென்று பரவசமனமாய் இருப்போர் ஒரு வகை. இன்னோருக்கு அந்த மனுஷ்யரைப்பற்றி மட்டும் ஆவலே யன்றி, அவரிடத்தில் ஏதேனும் உதவி பெறவேண்டுமென்ற நோக்க மில்லை. இத்தகையோருக்கு ஒரு கடி தம் அனுப்புமிடத்தில் அக்கடிதத்திற் கண்டபடி உடனே செய்ய அவர்க ளுக்கு நெஞ்சு தானாகவே தூண்டும். (2) பெரிய மனிதர்களின் தயவு இருந் தால் என்றைக்காவது உதவி கேட் கலாமென்று கருதி, அதற்காக அன்பு பாராட்டுவோர் இரண்டாம் வகையி னர். இன்னோரும் முதல் வகையின ரைப் போலவே அந்தப் பெரிய மனுஷ்யரின் கடிதப்படி நிறைவேற்றி வைக்க விரைவர். ஆனால், ஆழமான அன்புமட்டும் காண இயலா. (3) தங்க ளுக்கு லாபமில்லாத விஷயங்களில் ஜாடையாகத் தூரயிருந்து விலகும் ஸ்வபாவத்தினர் மூன்றாவது வகை. இன்னோரை உதவிக்கு அழைக்கும் சமயத்தில் தங்கட்கு அதில் லாபம் இல்லையென்று தந்திரமாய் விலகிக் கொள்வார்கள். எனவே, ஒருவரது கடிதத்தை மதிக்கும் மதிப்பு அவ ரவர் எவ்வளவு வரைக்கும் நேசிக்கி றார்களோ—எவ்வளவு வரைக்கும் களங்கமற்று நிற்கிறார்களோ அதைப் பொறுத்ததாகவே இருக்கும். எந்த நெஞ்சு உடனே உதவிசெய்யத் தூண்டுமென்பது இதுகாறும் கூறிய வற்றிலிருந்தும் ஒருவாறு விளங்கும்.

## இரகசியத்தில் சொல்லி யனுப்புதல்.

ஏன் நீ மட்டும் வருகிறாய்? உன் மனைவி குழந்தை களையும் அழைத்துவந்து சிலநாள் இருந்துவிட்டுப்போகிறது தானே என்று வீட்டுக்குவந்த பந்துவினிடம் இரகசியமாய் வீட்டின் தலைவி சொல்லியனுப்புகிறாள். பிறகு எவ்வித விசேஷமுமில்லாமல் அந்தப் பந்து தன் குடும்பத்துடன் வந்து சேருகிறான். வீட்டின் தலைவன் எதற்காக வந்தார் களோவென்று விஷயம் தெரியாமலிருந்துவிடுகிறான். தன் மனைவியின் தடபுடலான விருந்து உபசாரங்களையும் கவ னிக்கிறான். தன் மனைவியே அவர்களை வரும்படி சொல்லி யனுப்பி யிருக்கலாமென்று எண்ணுகிறான். மனைவியைக் கேட்க முடிகிறதில்லை. ஒருசமயம் கேட்டுவிடினோ, "ஆ! உங்களுக்கு எவர்களும் பிடிக்காது; எனக்கு அப்படி இருக்க முடிகிறதா? அவர்களாகத்தான் வந்தார்கள்; நான் சொல்லியனுப்பினேனென்று பழிபோடவேண்டாம்" என் கிறாள். குடித்தனத்தின் செலவு கஷ்டங்களைத் தெரிந்து கொள்ளாத பெண்டீரால் கணவன் படும்பாடு சொல்லவுங் கூடுமோ? தன் தலைவிதியென்றே காலந்தள்ள நேர்கிறது.

தாங்களே எதையும் செய்து பார்க்கும் பொழுது தான் அதன் பளுவை அறிகிறார்கள். சம்பாதித்துச் செலவிடுவோனின் கஷ்டம் மற்றவர் அறிவார்?

# விபசாரத்தின் பயங்கரம்

(469-ம் பக்கத் தொடர்ச்சி.)

காலையில் சிறுநீர் விடுகையில் ஜில்லென்று இருக்கும். பிறகு மறுமுறை விடுகையில் கனத்த எரிவு தோன்றும். நீர் அதிகமாக இருந்து வருகையில் எரிச்சலில் குறைவு காட்டும். நீர் கொஞ்சமாக விடுகையில் எரிச்சல் பெருகிக்கொள்ளும். சில சமயங்களில் சொட்டு மூத்திரம் என்ற ரோகம் தொடங்கும். அதிகமான நீர் விடவேண்டியிருந்தும், நீர் சரிவர இறங்காமல் சொட்டுச் சொட்டாகவே வரும். ஒவ்வொரு சொட்டும் ஒவ்வொரு அக்கினித் துளியாகத் தோன்றிக் கதறவைக்கும். சில சமயங்களில் நீர்த்துவார மத்தியில் சதையடைத்துக் கொண்டோ, கல்லைப் போன்ற ஏதாவது ஒன்று அடைத்துக் கொண்டோ நீர் வாமலே போக, புருஷ அவயவத்தில் நீர் நிறைந்து பெருகிவிட, அப்போது மனுஷ்யனுடைய பாடு பிராண கஷ்டமாய்த் திக்கு முக்காடவைத்து மூர்ச்சித்துப் போகும்படியான நிலையில் பயங்கரப் படுத்திவிடும். அப்பொழுது ஆங்கில வைத்திய முறையில் புருஷ அவயவத்தில் சலாகைப் பாய்ச்சி நீர்த் துவாரத்தின் நடுவில் தடைபட்டு நிற்பதை விலக்கினால் தான் நீர் இறங்கத் தொடங்கும். இதற்கு உடனே குணம் தருவது ஆங்கிலவைத்தியமே. அந்த வேளையில் ஆங்கில வைத்தியரிடம் அகப்பட்டுக்கொண்டு மனுஷ்ய ஜீவன் படும் பாடும் கதறுகையும் பதினாறு ஜென்மங்களுக்கும் போதும். மூத்திரக்கால் குறுகுவதினாலும், அது கோணலும் குறுக்கும் பட்டுக் கெடுவதினாலும்கூட இவ்விதம் மூத்திரம் தாராளமாய் வாாமல் அடைபட்டும் போகலாம். இந்து வைத்தியத்தில் இந்த மூத்திர அடைப்பைக் காலகாணத்தில் நிவர்த்திக்கமுடியும். ஆங்கில வைத்தியத்தில் உடனே குணமிருந்தாலும், மறுபடி இவ்விதம் மூத்திரம் அடைபட்டு வாதனைப்படவும் சிலருக்கு நேர்ந்திருக்கிறது. ஒரு முறை நீர்த்துவாரத்தில் சலாகை போட்டுக் கொண்டோர் மறுபடியும் போட வருமாம்.

ஃ

இந்த வெட்டைரோகம் குணம் அடைந்தது போற் சாண்பித்துத் திரும்பத்திரும்ப வரும். சிலருக்கு ஆயுள் பரியந்தமும் விட்டு விடாமல் தொடரும். ஏதேனும் கனத்த வியாதி தோன்றுகையில் இதுவும் நீர் எரிச்சல் மூலமாகத் தன்னைக் காண்பித்துக் கொள்ளும். கணவனிடமிருந்து மனைவிக்கும் தொடரும். முதலிலேயே இவ்வியாதியைத் குணப்படுத்திக் கொள்ளாமல் அசட்டை செய்வதினால் மூத்திரக்காலில் உண்டாகிய புண் படிப்படியாய் மேற்பாகத்திற்கு ஓடிப் படர்ந்து மூத்திர கோசத்துக்குக் கூடச் சென்று வியாபிக்கும். மேலும், ஓர் பொழுது, அந்தப் புண், வீரிய கமலங்களுக்கும் பீஜங்களிலுள்ள நாடிகளுக்கும் பாய்ந்து வீரியத்திலுள்ள சக்தியை மாய்த்து விடும். பீஜங்கள் வீங்கும். ஒரோர் பொழுது அரைப் பூட்டிலிருக்கும் நாடிகளுக்கும் வியாபித்து, கிரந்திப் புண் சங்கடத்தில்

---

வேதாந்த நூல்களை எவ்வளவோ கற்று மேதாவி யானவர்கள் கபடத்திலும், மோசம் செய்வதிலும், துரோகத்திலும் தேறியவர்களாய் முடிய, எதும் கல்லாத சாமான்யர்கள் உண்மையான தெய்வ பக்தி யுள்ளவர்களாக விளங்குவதையும் கண்டிருக்கிறோம். படிப்பு வேறு; ஒழுக்கம் வேறு.

உண்டாவது போலவே, அரையாப் புக்கட்டிகள் கிளம்பும்.

ஃ

பெண்களுக்கு மேகவெட்டை வருமாயின், அவயவம் வீங்கிச் சிவப்பு பாய்ந்து சீழொழுகும். அநேகருக்குத் தினவும் வலியும் அபரிமிதமாயிருக்கும். பிற்பாடு மூத்திரவாயில் கூட வீக்கப் பட்டு நீர் விடுகையில் கனத்த எரிச்சல் காணும். ஆனல், புருஷர்களுக்குள்ள அவ்வளவு எரிச்சலும் குத்தலும் இராது. இந்த வியாதி ஸ்திரீ அவயவத்தின் உட்டோல் முழுதையும் புண்படுத்திக் கருப்ப கோசத்துக்குக் கூடப்போய்ப்படரும். பெண்களுக்கு மேகவெட்டை கண்டால் அது சுத்தமாய்க் குணப்படுவது துர்லபமென்றும், பிரஸவகாலத்தில் மறுபடி தோன்றிக்கொண்டு அலறவைக்குமென்றும், தூர்த்தஸ்திரீகள் எவரிடத்தும் இந்த ரோகம் உண்டென்றும் அநேக வைத்திய பண்டிதர்கள் கூறுகிறார்கள். ஆதலின் மிகுந்த சிரத்தை வகித்துச் சிகிச்சை செய்வித்துக் கொள்ளவேண்டியது. (தொடரும்.)

## என் மனத்தூய்மை உன்னிடம் இராது.

நாம் இருவரும் நண்பர்கள்தான். ஆயின், நான் உன்னை நேசிப்பதுபோல் நீ என்னை நேசிக்க முடியாது. நான் பரிசுத்த நெஞ்சுடனிருப்பதற்கேற்ப என் நேசமும் அன்பும் களங்கமற்று நிர்மலமாயிருக்கிறது. நீ அவ்விதம் என்னைப்போல் தூய்மையுள்ளவனுதற்கில்லை. உன் நெஞ்சில் சுயநலம் இருக்கிறது; என்னல் உனக்கு எந்தப் பணச் செலவும் நேரக்கூடாது என்கிற குறுகிய எண்ணம் இருக்கிறது; மனத்தில் சில சங்கதிகளை வைத்துக்கொண்டு மறைத்துப் பேசுகிற தந்திரமும் இருக்கிறது. எனவே, என் மனத்தைப்போல் நீ களங்கமற்றவனுயில்லை. என் பரிசுத்தமும் உனக்குத் தெரிந்தேயிருப்பதால் நான் என்ன பேசினுலும் அது குற்றச் சொல்லாக உனக்குத் தோன்றுவதில்லை. நீ களங்கமுள்ளவனென்று நான் அறிந்திருப்பதால் உன் சாதாரணச் சொல்லும் உன் சுயநலத்தைக் காட்டுவதாக என் மனதிற் படுகிறது. காரணம், நீ தூய்மையில்லாததே; கள்ள அன்புடன் கூடி நிற்பதே. என்னைப்போல் நீ தாராளமாகப்பேசாததின் காரணமும் இதுவே. தெரிகிறதா?

பத்திராதிபர் விழித்துக்கொண்டு வி. பி. அனுப்பாத வரையில் சந்தாதாரர்கள் பத்திரிகையை ஆநந்தமாகப் பெற்றுக் கொள்ளுகிறார்கள். பிறகு வி. பி. அனுப்பினுலோ அவர் ஊரிலில்லை, இவர் போன இடமே தெரியவில்லையென்று பல வி. பி. கள் திரும்பி வருகின்றன.

# சந்திரமதியின் புத்திர சோகம்.

கண்டனள் கதறிவீழ்ந்தாள் கழுகெலா மிரியல் போகக்
கொண்டதோர் மகவினாசை யாவியைக் கொள்ளை கொள்ள
முண்டகக் கரத்தாலேந்தி முருகனை மடிமேல் வைத்தே
அண்டரு மறுகியேங்க வாய்திறந் தாற்ற லுற்றாள். (1)

கண்டாள்; கண்டவுடனே ஓ வென்று கதறிக் கொண்டு கீழே விழுந்தாள்; அங்குள்ள கழுகு முதலியன வெல்லாம் பயந்தோடிப் போக, தான் கொண்டதான ஒரு புத்திர னென்கிற வாஞ்சை அவளுயிரைக் கொள்ளை கொண்டு செல்ல, தனது தாமரை மலர் போன்ற கைகளிலே பிள்ளையையெடுத்து மடிமேல் வைத்துக்கொண்டு, தேவர்களும் மயங்கி அங்கலாய்க்கும்படி வாயைத் திறந்து பிரலாபிக்கலானாள்.

பனியானனைந்து வெயிலாலுலர்ந்து பசியாலலைந்து மூலவா
அனியாய வெங்கணரவாலிறந்த வதிபாவமென் கொலறியேன்;
தனியே கிடந்து விடநோய் செறிந்து தரை மீதுருண்ட மகனே!
இனியாரை நம்பி யுயிர் வாழ்வ மென்றனிறையோனும் யானுமவமே. (2)

மழை பொழிவதுபோலக் கண்ணீர் சொரிந்து பேயுங் கண்டு பரிதபிக்கும்படி மகனே! பனியினாலே உன்னுடம்பு நனைதலாகியும், பின்பு வெயிலினாலே காய்தலாகியும், பசியினாலே வருந்துதலாகியுங்கூட, நீ சாவாமல், யாரையும் கடிப்பதான அநியாயச் செய்கையையுடைய வெவ்விய கண்களோடு கூடின ஒரு பாம்பினாலே நீ இறந்து போகலான அதிக பாவம் யாது செய்தாயோ நான் தெரிகிலேன்; இங்கே நீ ஒருவனாகக் கிடந்து, விஷமாகிய வியாதிபிடித்து மண்மேற் புரண்டு கிடக்கிற புத்திரனே, இனி யாரை வேண்டி உயிர் வாழக்கடவோம்? எனது தலைவனும் நானும் ஆகிய நாங்களிருவரும் உயிர் வாழ்தல் வீணான காரியமே.

நிறையோசைபெற்ற பறையோசையற்று நிரையாய் நிறைந்த கழுகின்
சிறையோசையுற்ற செடியூடிறக்க விதியாரிழைத்த செயலோ!
மறையோனிரக்க வளநாடனைத்தும் வழுவாதளித்த வடிவேல்
இறையோனளித்த மகனே யுனக்கு மிதுவோ விதித்த விதியே! (3)

நிறைந்த ஒலியைக் கொண்ட வாத்தியங்களின் முழக்கங்களில்லாமல், வரிசையாய் நிறைந்திருக்கிற கழுகுகளினுடைய சிறகடி கொள்ளுகிற சத்தங்களைக் கொண்ட செடிகளுக்குள்ளே நீ இறந்து போகப் பிரமதேவனானவர் செய்த செய்கைதானோ? ஒரு பிராமணன் யாசிக்க, தனது வளநாடு முழுதுங் கொடுத்த கூரிய வேலாயுதத்தை யுடைய அரசன் பெற்ற புத்திரனே! உனக்குங் கூட இப்படித்தானோ லபிதமான லிபி வாய்த்தது?

வானின்றிழிந்து சொரிகின்ற தாரை மழைபோல வீழவிழிநீர்
ஊனின்றி மேனி யுதிரங்கள் சிந்த வுயிரின்றி வெம்பு தழலின்
மேனின்று வெந்ததளிர் போலுயங்கி விதியாரை நொந்து தனியே
யானின்றிரங்க வேனென்பதில்லை யிதுவோ வுனீதிமகனே!

ஆகாயத்திலிருந்திறங்கிப் பொழிகின்ற மழைத்தாரையைப் போற் கண்ணீ ரொழுகவும், என்னுடம்பிலே மாம்சமென்பதில்லாமல் ரத்தங்களொழுகவும், பிராணபலமுமில்லாமல் வெப்பமாகிய நெருப்பின் மேலே விழுந்து வெந்த தளிரைப்போல் வாடிப் பிரமதேவனை நொந்து கொள்ளுகிற தாயாகிய நான் ஒருத்தியாக நின்று பிரலாபிக்க, ஏன் பிரலாபிக்கிறு யென்பதில்லாமல் நீ கிடக்கிறதான இதுதானே உனக்கு நியாயமாக முடிந்தது புத்திரனே!

செங்கோலறத்தின் முறையே செலுத்து கிறலோ னெவர்க்கு முரவோன்
வெங்கோபயானை விறன் மன்னனம்மை விடுவிக்க வெண்ணி வருநாள்
பங்கேருகத்து மலர் போல் விளங்குவதனு! மகிழ்ந்த பரிவால்,
எங்கே யெனுசை மகனென்றுரைக்கிலினியேது சொல்வன் மகனே! (5)

தரும நீதிப்படியே செங்சோல் செலுத்துகின்ற சாமர்த்தியனுகியும், எப் படிப்பட்டவர்களுக்கும் அறிவாற் சிறந்தவனுகியும், வெவ்விய கோபத்தைக் கொண்ட யானையையுடைய வெற்றியான் மிக்க நமதாசன், நம்மிருவரையும் தான் வாங்கின பொருளைக் கொடுத்து மீட்டுக் கொள்ள வரும்போது, தாமரை மலர் போலு முகத்தையுடைய மகனே! தான் மீட்க வந்த சந்தோ ஷத்தினுலே, என்னுடைய பிரியமுள்ள புத்திர னெங்கே யென்றென்னைக் கேட்டால் அப்போது மகனே! மறுமொழி யாது சொல்லக்கடவேன்?

நீராளவாவி செறிநாடனைத்து நிறை மாதவற்குதவியும்
பாராளு நீர்மை தொடர்பற்ற தன்று படியாளு மெந்தை முடியில்
காராளரேர்கள் கடலோசை யோய்வில் கன்னேசி நாடதனைமேல்
ஆராளவல் லரவமே வனத்தி லரவாலிறந்த மகனே! (6)

நீர் நிரம்பக் குளங்கள் நெருங்கின கோசலநாடு முழுதும் நிறைவான பெரிய தவமுனிவனுக்குக் கொடுத்து விட்டாலும், உலகத்தை ஆளுவதான சம்பந் தத் தன்மை உனக்கில்லாமற் போனதன்று; உன் பிதாவைப் போலவே ஒரு நாட்டை யாளுகிற என் பிதாவின் காலம் முடிவு பெற்ருல், வேளாளர் கள் ஏர்களை ஓட்டுகிற ஓசை ஓயாதிருந்துள்ள கன்னேசி நாட்டைப் பின்பு நீ யல்லது இனி யார் ஆளுவார்கள்? ஐயோ! வீணுக இந்தக் காட்டிலே ஒரு பாம்பினுலே இறந்து போன குமாரா!

நல்லோர் வகுத்த முறையாமறங்கணு லெட்டிலொன்று குறையோம்,
இல்லோரை யற்பமிகழோ மிறுக்கு மிறையன்றி யேறவுகவேம்,
சொல்லோ மறுத்து முறையோ முறைத்த துறவோர்கள் புத்திகடவேம்,
எல்லோர் தமக்கு மினிதே விளைப்பமேதாக வந்ததிதுவே. (7)

நன்னூலுணர்ந்த பெரியோர்கள் சொன்ன தருமங்கள் முப்பத்திரண்டிலே ஒரு தருமமாயினுங் குறையாது செய்தோம்; எளியவர்களைக் கொஞ்ச மேனும் இகழ்ச்சி செய்திலோம்: நாங்கள் அரசாரகையால் கொடுத்துத் தீர்ப் பதான பகுதிப் பொருளான ஆறிலொரு பங்கை யல்லது அதிகமாக விரும் பினேமல்லோம்; பொய் சொல்லி யறியோம்; கேட்டவர்களுக்கு இல்லை யென்று மறுத்துச் சொல்லிலோம்; துறவறத்தார்கள் சொன்ன புத்தியைக் கடந்து சென்றிலோம்; யாவருக்கும் நன்மையையே செய்து வந்தோம்; இப்படியிருக்கையிலே எந்தக் காரணத்தினுலே இப்படிப் பாம்பு கடித்துச் சாவலான தெங்கள் பிள்ளை? (மறு ஸஞ்சிகையில் முடிவு.)



## பிரபஞ்ச நவீனங்கள்.

1. காப்பா (Kaffa) என்ற பெயரிலிருந்து காப்பி (Coffee) என்ற பெயர் உண்டாயிற்று. காப்பா என்பது கிழக்கு ஆப்ரிக்காவில் அபிஸீனியாவிற்குத் தெற்கேயுள்ளது.

2. தென் துருவத்திற்கு முதன் முதலில் சென்றவர் காப்டன் அமுட்சன். (Cpt. Aunudsen) அவர் சென்றது 1911-வருடம் டிசம்பர் மாதம் 14-தேதி.

3. கொசுவுக்கு 22 – பற்கள் இருக்கின்றனவாம்.

4. பிரான்சு தேசத்தில் பிரசங்கம் செய்கிற காலத்தைக் குறைக்க ஒரு மின்சார யந்திரம் ஏற்படுத்தியிருக்கிறது. அது இந்திய தேசத்திற்கு உன்னதமாயிருக்கும். அக்கிராசனாதிபதி ஒரு பொத்தானை அமுத்தினவுடனே பிரசங்கிப்பவரின் இருபக்கங்களிலும் பிரசங்க பீடத்தின்மேல் பிரகாசமான கண்ணாடிகளில் "ஐந்து நிமிடங்கள்" என்று தோன்றுகிறது. இது பிரசங்கிப்பவருக்கு சீக்கிரம் முடிவுரை சொல்லும்படி எச்சரிக்கைப்படுத்துகிறது. ஐந்து நிமிட காலம் முடிந்த பிற்பாடும் பேசிக்கொண்டிருந்தால் மேலே சொன்ன பிரகாசமுள்ள கண்ணாடிகளில் 'முடிந்தது' என்பது தோன்றுகிறதாம். பிரசங்கிப்பவர் பீடத்தைவிட்டு உடனே போகவேண்டியது. அப்படியும் போகாவிட்டால் அக்கிராசனாதிபதி விளக்குகளை அணைத்து மறுபடி ஏற்றி முடிக்கும்படி சொல்வார். உடனே பிரசங்கிப்பவர் தம் பிரசங்கத்தை முடித்துக்கொள்ள வேண்டியதே.

P. G. குலசேகரன்.
"மனோரஞ்சனி விலாஸ்."



## சிறுமணித்திரள்.

(470-ம் பக்கத் தொடர்ச்சி.)

919. சந்தோஷமும் துக்கமும் முன் வினையின் பலனாயிருக்கலாம்; மனிதன் சோம்பிக் கிடப்பதற்கில்லை.

920. கற்றவர்க ளென்பதற்குக் கால் சராய் ஓர் விளம்பரம் போலும்.

921. நல்லது என்பதைச் செய்ய என்றும் தயாராயிரு.

922. பிள்ளைகளைப் படிக்க வைக்கவேண்டுமென்னும் கவலை ஒரு காலம்! பின்னரோ உத்தியோகம் தேடவேண்டுமென்னும் கவலை!

923. எல்லா சங்கதியும் மனிதனின் இடை விடாத முயற்சியிலிருக்கிறதெனினும், அதற்குக் கடவுளது அனுக்கிரகமும் வேண்டும்.

924. கற்றதால் பெருமை வந்திடாது. நடந்து கொள்ளும் நற்குணத்தால் தான் வரவேண்டும்.

925. தவறு கண்ட இடத்தில் திருத்துவது மனித சுபாவமாகும். ஏளனம் செய்வது மிருகசுபாவமாகும்.

926. தவறியதே யில்லை யென்பதைவிடப் பெரிய தவறு வேறில்லை.

927. கடலில் முத்து எடுப்பவர்கள் இரவில் முத்தெடுப்பதில்லை. ஆனால், கிரந்த கர்த்தர்களோ இரவு பகலாக ஆராய்ச்சிக் கடலில் மூழ்கி அறிவு முத்தெடுத்துப் பொது ஜனங்களுக்கு வழங்கி மகிழ்கின்றனர்.

928. எத்தனையோ உடைகளைக் கொண்டு நம்மை அலங்காரம் செய்து கொள்ளினும், நமது மனதிலுள்ள ஸஞ்சலத்தை முகம் தெளிவாகக் காட்டிவிடுகிறது.

929. குழந்தை காட்டும் அழகிய புன்னகையையும் அன்பையும் நண்பர்களிடம் காணில் அதுவே ஸ்வர்க்க பூமி.

M. P. குருசாமி நாடார்.

# கதர் தீபாவளி.

மீனாக்ஷி:—தீபாவளி வருகிறதே! போன வருஷந்தான் காச்சிப் பட்டுப் புடவை வாங்கித்தருவதாய்க் கூறி ஏமாற்றி விட்டீர்கள். இந்த வருடமாவது வாங்கித் தருகிறீர்களா? எனக்கு என்றால் உங்களிடம் பணமே இருக்காதே!

சுந்திரமய்யர்:—நீ பேசுவது அழகு தான். தேசமெங்கும் சுதேசி கோஷம் பலமாக இருக்கிறது. எங்கு பார்த்தாலும் "கதர்" பேச்சுதான். மேலும், உலகிலேயே பண நெருக்கடி ஏற்பட்டிருப்பது உனக்கெங்கு தெரியப்போகிறது? நூற்றுக் கணக்கான ரூபாய்களைப் பட்டாடைகளில் கொட்டி அன்னிய நாட்டார் பிழைப்பதிலும், அந்தப் பணத்திற்கு நீ ஒரு நகைசெய்து போட்டுக்கொண்டாலும் ஆபத்துக்கு உதவும்; இந்த வருடம் நாம் கதர் தீபாவளிதான் நடத்தவேண்டும்.

மீனாக்ஷி:—பணம் நெருக்கடியும், அன்னிய நாட்டார் பிழைப்பதும் எனக்குப் புடவை வாங்கிக்கொடுப்பதில்தானா வந்துவிடிந்தது? உங்கள் கை கடிகாரமும், ஏறிச் செல்லும் மோட்டாரும் பண நெருக்கடி உண்டுபண்ணவில்லை போலும். அவைகள் மூலம் அன்னிய நாட்டுக்குப் பணம் போகவில்லைபோலும். என் விஷயத்தில் ஏன் இவ்விதம் நொண்டிச் சமாதானம் கூறுகின்றீர்கள்? இது உங்களுக்கு நியாயமில்லை. இந்த வருடம் மட்டில் பட்டுப்புடவை வாங்கித் தந்துவிடுங்கள். அடுத்த வருடமுதல் கதர் தீபாவளியாகவே கொண்டாடலாம்.

சுந்திரமய்யர்:—அதெல்லாம் முடியாது. உலகமெல்லாம் கதர் கட்டுகிறது. நாம் மட்டும் சொகுஸாகப் பட்டாடை கட்டித் திரிவதா? இந்த வருடம் நீ கதர்ப்புடவைதான் அணியவேண்டும். உலக அறிவு உனக்கு ஏற்பட்டிருக்குமானால், நான் இவ்வளவு தூரம் உன்னுடன் வாதம் செய்யவேண்டாம். அஞ்ஞான மூட்டைகளுடன் போராட யாராலிருக்கிறது? என் தலையெழுத்து உன்னை விவாகம் செய்துகொண்டு அழுகிறேன். என்ன செய்வது?

மீனாக்ஷி:—ஆம், நான் அஞ்ஞானந்தான். இப்படி எல்லாம் உங்களிடம் திட்டு கேட்க ஈசுவரன் என் தலையிலெழுதிவிட்டான். எனக்குப் பட்டுப் புடவையும் வேண்டாம். இத்தகைய வசவுகளும் வேண்டாம். [என்று முகத்தைக் கோணிக் கொண்டாள்.]

"இத்தகைய கோணுகை எல்லாம் என்னிடம் பலிக்காது" (என்று கோபத்துடன் சொல்லிச் சுந்திரமய்யர் தம் வேலைக்குச் சென்றார்.)

சிறிது நேரத்திற்கெல்லாம் மீனாக்ஷியைத் தேடிக்கொண்டு அவள் தோழி ஜானகி வந்து சேர்ந்தாள். மீனாக்ஷியின் முக வேறுபாடுகளைக் கண்ட ஜானகி, காரணம் யாது என விசாரித்தாள்.

---

ஒருவன் நம்மைவிட்டுப் பிரிய நினைக்கிறான். அதை அறிந்துகொண்ட நாம் அப்போது பிரிந்துவிடாமலே அவனோடு வெகு உறவாய் ஒட்டிச்சேர்ந்து இருந்து, பிறகு நாமே வலிய அவனிடமிருந்து பிரிந்துவிடுகிற கௌரவத்தை ஏற்றுத் தலைநிமிர்ந்து நின்று, விலகி, அவனை ஏங்கவைப்பதே சாமர்த்தியமாம்.

மீனாக்ஷி:—என் ஆத்துக்காரர் தீபாவளிக்குக் கதர் புடவைதான் வாங்கித் தருவாராம். நான் பட்டுப் புடவைதான் வேண்டுமென்றேன். அதற்காக ஒரு சண்டை பிடித்து வெளியே சென்று விட்டார்.

ஜானகி:—என்ன மீனாக்ஷி! சுத்த அசடாக, இருக்கிறாய்? தற்காலத்திய நாகரீகம் இன்னதென்று தெரியாமல் பேசுகிறாயே? இக்காலத்தில் யாவரும் கதர் கட்டித்தான் ஆகவேண்டும். நம் நாட்டுத் துணியன்றோ அது. சுதேசாபிமானம் வேண்டாமா? உனக்கேன் இந்த எண்ணம் ஏற்படவில்லை? பட்டு என்பதைப் பகட்டு என்று ஞாபகத்தில் வை.

மீனாக்ஷி:—ரொம்ப அழகாய் இருக்கிறது. என் கணவருக்கு ஒத்தாசையாக நீயும் பேச வந்தாயா? கதர் புடவை கட்ட என்னால் முடியாது. அது நாலு பிள்ளைகளை ஒரே சமயத்தில் தூக்குவதுபோலிருக்கும்.

ஜானகி:—ஆம், எல்லாம் சிரமம்தான். பிள்ளை பெறுவதும் சிரமமானதுதான். அதனால், உலகில் பிள்ளை பெருமலா இருக்கிறார்கள்? அதுபோல், நம் நாட்டுப் பொருளாதாரம் செழித்து "விடுதலை" என்ற குழந்தை பிறக்க வேண்டுமானால் இந்த சிரமத்தை யெல்லாம் நாம் கவனிக்கக்கூடாது.

மீனாக்ஷி:—நீ எல்லாம் படித்திருக்கிறாய். என் கணவன் என்னை மூடாத்மா என்கிறார். கதர் ஏன் கட்டவேண்டும் என்பதற்குக் காரணம் நீதான் சொல்லேன்.

ஜானகி:—சென்ற வருடம் கதர் கண்காக்ஷி காணப் போயிருந்தோமே ஞாபகமில்லையா? அதில் எவ்வளவு ஏழைகள் நூற்றுக்கொண்டிருந்தனர்? 80-வயது கிழவி ஒருத்தி நூற்றுக்கொண்டிருந்தது கண்டு ஆச்சரியப்பட்டோமே? அவர்கள் கிராமவாசிகள். வேறு தொழில் இன்றிக் கைராட்டினத்தில் கிடைக்கும் சொற்பவருமானத்தில் காலந் தள்ளுகின்றனர். நம் நாடு ஏழைநாடு தானே. கிராமாந்தர வாசிகளில் 100-க்கு 85-விகிதம் வேலையின்றி வீணே கிடக்க வேண்டி யிருக்கிறது. இதுபோன்ற ஏழைகள் நம் நாட்டில் கோடிக் கணக்கில் இருக்கின்றார்கள். அவர்கள் பிழைப்பதற்காகத்தான் காந்தியடிகள் கதர் கட்ட வேண்டும் என்கிறார்.

மீனாக்ஷி:—ஐயோ பாவம்! அப்படியானால் கதர் கட்டவேண்டியது தான். கதரில் நல்ல துணிகள் இல்லையே! நான் என்ன செய்வது? "உண்பது நாழி, உடுப்பது நான்கு முழம்" என்பதற்கு நாம் ஆண்பிள்ளைகளா? பெண்மணிகள் 18-முழமுள்ள கனத்தை எவ்விதம் அணிவது? எவ்விதம் தூக்குவது?

ஜானகி:—எத்தனை விதம் சீட்டிகள், பூக்கள் போட்ட துணிகள், சரிகை போட்ட புடவைகள், மெல்லிய துணி ரகங்கள், கதர் காக்ஷியில் வந்திருந்தன. கொஞ்சம் விலைகூட இருக்கலாம். நாளாவிர்த்தியில் சரியான விலைக்கு வந்துவிடும். போன மாதம் பத்மாவதி கலியாணத்திற்கு சரிகைத்தலைப்புடன் கூடிய கதர்ப் புடவைதானே எடுத்தார்கள். ரொம்ப அழகாக இருந்தது. மேலும்,

---

மலைபோல் செல்வம் குவிந்திருப்பினும் அவ்வளவையும் அல்பமாக நினைத்துவிடக்கூடிய ஒரு பெரிய துயரமும் அத்துடன் இருக்கும். குறையில்லாத செல்வமில்லை.

நமது பாட்டிகள் எல்லாம் அந்தக் காலத்தில் இந்தத் துணிதானே அணிந்தார்கள். அவர்களின் வழியை நாமும் பின்பற்றுவோமே!

மீனுக்ஷி:—பாட்டியம்மான் காலத்தை இப்போது எவ்விதம் பின்பற்றுவது? காசிமாலை கடியார கொலுசாக ஆகிவிட்டதல்லவா? காலம் மாறிவிடவில்லையா? கதர் கட்டுவது எனக்கு அவமானமாகத்தான் படுகிறது.

ஜானகி:—நீ பேசுவது வேடிக்கையாக இருக்கிறது. உலக அனுபவம் உனக்கு இல்லை. பம்பாய் நகரத்து தாதாபாய் நௌரோஜியின் பேத்திகளும், பார்சி வகுப்பில் கோடீசுவரியாக விளங்கும் "மிதுபென்"னும், நம் நாட்டுக்கும், பெண் சமூகத்திற்கும் பெருத்த கீர்த்தியை நாட்டியுள்ள கவியரசி சரோஜனியும் கதர் புடவைதானே கட்டுகிறார்கள். அவர்களிலும் நாம் உயர்ந்தவர்களா? சென்னை ஸ்ரீமதி கோதை நாயகி அம்மாள் ஒரு புதுமாதிரிக் கதர் புடவை கட்டிக்கொண்டிருந்தார்கள். நன்றாக இருந்தது. அதுபோல் தான் நான் வாங்க உத்தேசித்திருக்கிறேன்.

மீனுக்ஷி:—அப்படியானால் நாம் கதர் வாங்கினால் அந்தப் பணம் ஏழைகளுக்குப் போகிறதென்று சொல்லு.

ஜானகி:—அதற்கென்ன சந்தேகம். ஒரு ரூபாய்க்குக் கதர் வாங்கினால் கடைக்காரனுக்கு ஒரு அணு லாபம். பாக்கி பூராவும், பருத்திச்செடி பயிர் செய்பவன், கொட்டை எடுப்பவன், சுத்தம்செய்து பஞ்சை பட்டைபோடுபவன், கைராட்டையில் நூற்போர், நெசவு செய்பவர்வரை எல்லோரும் அடைகின்றனர். நம் பணம் இவ்வளவு பேர் வயிற்றுக்கும் செல்வதெனில், நாம் அன்ன தானம் செய்த பலனல்லவா அடைகின்றோம். மேலும், இத்தகைய பூர்வீகக் கைத்தொழில் போனதினால் தான் நாம் துணி வாங்கும் விஷயத்தில் வருடம் 60-கோடி ரூபாய் வெளிநாட்டுக்கு அனுப்பிவைக்கிறோம். இதைத் தான் காந்திஜீ சொல்கிறார். நாம் காதில் வாங்கவேண்டாமா?

மீனுக்ஷி:—ஆம், நீ சொல்வது எனக்கு நன்றாய்ப் படுகிறது. நான் படித்திருந்தால் அறியாத்தனமாய் இப்படிப் பேசமாட்டேன். இதனால் தான் காலையில் என் கணவருடன் சண்டையிட நேர்ந்துவிட்டது. இதற்காக நான் வருந்துகிறேன். நீ வாங்கும்போது எனக்கும் ஒரு கதர்புடவை வாங்கிக்கொடு.

ஜானகி:—அவசியம் வாங்கித் தருகிறேன். நீ எப்படியாவது கதர் வாங்கினால் சந்தோஷமே.

என்று கூறி விடைபெற்றுச் சென்றாள். இரவு எட்டு மணிக்கு வீட்டுக்கு வந்த சுந்தரமய்யர் தன் மனைவி மீனுக்ஷி ஒரு கைராட்டினத்தில் நூற்கப் பழகிக்கொண்டிருக்கக் கண்டார்.

—"கைராட்டினத்தில் என்ன செய்கிறாய்? காச்சிப் பட்டுப்புடவை உண்டாக்குகிறாயா? என்ன?" என்றார்.

---

தான் பிராணதாரமாய் நம்பியவர்கள் தன்னை வெறுத்துக் கைவிடுங்காலையில், அதுவரையில் தன்னிடம் அலக்ஷியமாய் ஒதுங்கிக் கிடந்தவர்களை உண்மையான விசுவாசிகளாக மாற்றிக் கடவுள் துணை சேர்த்துவிட்டு ஏமாறிய நெஞ்சுக்குத் தைரியமும் புது சக்தியும் தருகிறார்.

—"ஜானகி பகலில் காந்திஜீயின் சக்தியையும் காரியங்களையும் புகழ்ந்து என்னை நூற்கும்படி உபதேசித்தாள். அதுதான் பழக்கிக்கொள்கிறேன். அவளே நல்ல கதர் புடவையாக வாங்கித்தருவதாகச் சொன்னாள். விஷயம் தெரியாதபடியால் நான் பட்டுகளில் ஆசைவைத்தேன். இனி எனக்குக் கதர் புடவைதான் வேண்டும்." என்று நாணத்துடன் மொழிந்தாள்.

—"பலே! யானையை யானையைக்கொண்டே சரிப்படுத்தவேண்டும் உன்னை சரியானபடி திருப்ப உன்போன்ற பெண்களால்தான் முடிகிறது. எப்படியாவது ஞானம் வந்ததே, அது போதும். எனக்கு இந்த மருந்து முதலில் படாமல் போயிற்று. ஜானகி நல்ல புத்திசாலி; நீயும் இன்று முதல் நல்ல புத்திசாலியாகிவிட்டாய்."

என்று அவள் கன்னத்தில் ஒரு முத்தம் ஈந்தார்.

பண்டிட். கே. விஜயராகவ அய்யங்கார், ஸ்ரீரங்கம்.

## சேலவழிந்த நேரம் தெரிவதில்லை.

கால்மணிநேரத்தில் திரும்பிவிடலாமென்று புறப்பட்டவன் வெளிச்சென்றபின் எத்தனை மணி நேரமாயிற்றென்பதையே எண்ணாதவனாய்க் கால்மணிக்குப் பதிலாக ஒரு மணிநேரம் சென்று திரும்புகிறான். நண்பர்களிடம் பேசிவிட்டு ஒரு அரைமணி நேரத்தில் வந்துவிடலாமெனச் செல்வோன் சிநேக ஸல்லாபத்தில் அதிகப் பொழுதைப் போக்கிவிட்டு, வெகு நேரம் பேசிக்கொண்டிருந்துவிட்டேனேயென்று திடுக்கிட்டுப் பிறகு புறப்படுகிறான். தாயின் இல்லத்திற்கு வந்த பெண் அதற்குள் ஒரு மாதம் ஆய்விட்டதா?—உடனே தன்னைப் புறப்பட்டு வருமாறு கடிதம் வந்துவிடுமே என்று ஏங்குகிறாள். கழிந்துவிட்ட நாட்களின் கணக்கு இவளுக்குத் தெரிவதில்லை. கடிதங்கள் எழுதிக்கொண்டிருக்கும் ஊக்கத்தில் தபாலுக்கு நேரமாய் விட்டதையும் அறியாமற்போக, அவற்றை அன்றைய தபாலுக்கு அனுப்ப முடியாமலும் தவறிவிடுகிறது. இதன்றி, வேலை செய்யும்போதுதான் கடிகாரம் அதிக வேகமாய் ஓடுவதுபோலிருக்குமாம். இதையும் மறுப்பதற்கில்லை.

இதோ வந்துவிடுமென்று எட்டு அணா கடன்பெற்றுச் சென்றவர் திருப்பித்தரப் பதினெட்டு நாட்களானால், எட்டு ரூபாய் பெற்றுச்சென்றால் எத்தனை நாளாகும்? சிலர் ஒருஅணா இரண்டணா கடன்பெற்றுச்சென்று மெதுவாகத் தங்கள் கையில் பணம் வந்தபோது பல மாதங்கட்குப் பிறகே தருகிறார்கள். சிலர் தராமலே ஜாடையாக ஏப்பமிட்டுவிடுகின்றனர்.




# இராஜ சந்திரன்

## அல்லது—மறைந்த கைதி

### அத்தியாயம்—4.

### மறைந்த சந்திரனின் உதயம்.

(440-ம் பக்கத் தொடர்ச்சி.)

V

இராஜ சந்திரன் :—மிகவும் சந்தோஷம். நான் நாளையதினம் மாலை கட்டாயம்வருகிறேன். கிருஷ்வேணி, நீ எனக்கோர் உதவி செய்யவேண்டும் அஃதென்னவெனில், நான் முன்பின் சுரங்கத்தில் வேலை செய்ததில்லை யாகையால், எனக்கு சென்றவருடம் உஷ்ணமிகுதியால் கொடிய சீதபேதி வந்துவிட்டது. நான் சுமார் இரண்டு மாதம் படுக்கையிலே கிடந்தேன். அப்போது என்னுடன் வேலைசெய்யும் கூலியாட்களிடம் சில்லரையாகக் கடன் வாங்கி வைத்தியருக்குக் கொடுத்தது மன்றி என் கைசெலவிற்கும் வைத்துக் கொண்டேன். அந்தக் கடனை இப்போது நான் தீர்க்க வேண்டுமாதலால் எனக்கு ஐம்பது ரூபாய் உதவி செய்வாயா என்றான்.

கிருஷ்ணவேணி :—உனக்கு ரூபாய் வேண்டுமா? ஐயோ என்வசமில்லையே. இருந்தால் இப்போதே கொண்டு வந்து கொடுத்து விடுவேனே; அம்மாளிடம் ரூபாயில்லை; அப்பாவைக் கேட்டால் காரணம் கேட்பார். இதற்கென்ன செய்வது? ஆயினும் நீ நாளைய தினம் வா, நானெப்படியாவது பார்த்துக் கொடுக்கிறேன். கடன்காரர் அதிக தொந்திரவு செய்கிறார்களா? அப்படியாயின் என் நகை யொன்றைக்கொடுக்கிறேன். அதை யவர்களிடம் நீ ரூபாய் கொடுக்கிறவரையில் ஈடுகட்டிவை.

இராஜ சந்திரன் :—உன் நகை எனக்கு வேண்டாம், கடன்காரர் யாரும் என்னைத் தொந்திரவு செய்யவில்லை. இன்னும் சில நாளில் பணம் சேகரித்துக் கொடு.

கிருஷ்ணவேணி :— நீ நாளை மாலை இங்கு வா, வரும்போது பிறரொருவரும் காணாமல் வா. ஏனெனில் உன் கதி உனக்கு தெரியாதா? குற்றவாளி யல்லவென்று நீ கூறுவது உண்மையாயிருந்தால் அதை யேன் ருஜூப்படுத்தலாகாது?

இராஜ சந்திரன் :—அதை ருஜூப்படுத்த முன்வருபவர்கள் யார்? நான் செய்யவில்லையென்றும், தங்கவேலு செய்தானென்றும் நானே கூறினால் கேட்போரெல்லாம் நகைத்து நான் கூறுவது கட்டுக்கதை யென்று பரிகாசம் செய்வார்களே யொழிய நம்பமாட்டார்கள். நானே கொலைசெய்தவனென ஊரிலுள்ளோரெல்லாம் அபிப்பிராயப் படுகிறார்களல்லவா?

கிருஷ்ணவேணி :—ஆம், நீ கூறுவது உண்மையே. நீ கூற முன்வாவிடில், லாயர் கண்ணப்பனிடம் இது சங்கதி கூறி அவனால் கூடிய உபகாரம் செய்யும்படி கேட்டுக்கொள்ளலாமா? அவன் நமது தாய் மாமனுகையாலும், நம்மிருவரையும் அதிக அன்புடன் நேசித்து வருவதாலும் அவன் இது விஷயத்தில் அதிக சிரத்தை யெடுத்துக்கொள்வா னென்றே நம்புகிறேன்.

இராஜசந்திரன் :—ஆம், ஆம், அவர்தான் இதற்குத் தகுந்த மனிதர். அவ்விடம் நம் இரகசியத்தைக் கூறலாம். நீயும் அவரையே விவாகம் செய்து கொள்ள யோசித்திருப்பதால் நமக்கு அதிகம் நெருங்கியவரு மாவார். அவரை நான் எப்படிக் காண முடியும்?

கிருஷ்ணவேணி:—கண்ணப்பரைக்கண்டு நான் அவரிடம் யோசித்து உனக்குக் கூறுகிறேன். உனக்கு இன்னொரு புதிய சங்கதி. கண்ணப்பர் என்னை விவாகம்செய்து கொள்ளாமல் கமலவல்லியை விவாகம் செய்து கொண்டார். பெரிய அப்பா சபாபதி முதலியார் காலஞ் சென்று விட்டார்.

இராஜ சந்திரன் :—பெரிய அப்பா போய் விட்டாரா? என்னையே நம்பிக் கிடந்தாரே! ஐயோ! பாவி நான் பக்கத்தில் இல்லாமல் மோசம் செய்தேனே! என் கையில் ஒப்புவித்த கமலாவுக்கு நல்ல இடமே கிடைத்தது. நீ அதற்குப் பொறாமைப் படாதே. கமலாவுக்குத் தாய் தான் இல்லை யென்றால் இப்போது தகப்பனுமில்லை. அவன் கதை பெரிய பரிதாபமே. கமலாவைக் காண ஆசைப் படுகிறேன்.

கிருஷ்ணவேணி :—எனக்குப் பொறாமை இல்லை. கமலா மணந்தாலும் அவன் அன்னிய ஸ்திரீ அல்லவே. கண்ணப்பன் என்றைக்கும் நமது சொந்த சொத்துதான். எதுவும் பிராப்தப்படியே நடக்கும்.

இராஜ சந்திரன் :—கமலா சுகமாக வாழட்டுமென்று ஆசீர்வதிக்கிறேன். நான் இப்போது எவ்விடத்திலிருக்கிறதாக ஊரார் நினைக்கிறார்கள்?

கிருஷ்ணவேணி :—நீ தற்கொலை புரிந்து கொண்டிறந்து விட்டாயென்றும், பினங்கு முதலிய வேறு தேசத்திற்கு ஓடிப்போய் விட்டாயென்றும் சிலர் கூறுகின்றனர். சிலர் உன்னை இரங்கோனில் பார்த்ததாக அப்பாவிடம் சொன்னார்களாம்.

இராஜ சந்திரன்:—நான் ஓர் உபாயம் செய்தேன். அஃதென்ன வெனில், என்மீது குற்றம் சுமத்தப்பட்டபின் என்னைத் தூக்கிலிட்டுக்கொன்று விடுவார்களெனப் பயந்து, நான் வீட்டை விட்டுப் புறப்பட்டு எவ்வூருக்குச் சென்று வாழலாமென யோசித்தேன். என் மனதிற்கு ஒன்றும் தோன்றவில்லை. சீமைக்குப் போனாலும் என்னைப் போலீஸ் அதிகாரிகள் கண்டு பிடித்து விடுவார்களெனப் பயந்து நான் தற்கொலை புரிந்து இறந்ததாக ஊரார் அபிப்பிராயப்பட வேண்டுமெனக் கருதி, என்மீது குற்றம் சாட்டிய நியாயாதிபதிகட்கு இரங்கோனிலிருந்து நானெழுதிய மாதிரி ஒரு கடித மெழுதி அங்கு இருக்கும் ஒரு நண்பனுக்கு அனுப்பி அவன் மூலமாக அனுப்பினேன். அதில் நான் நிரபராதி யென்றும், என் நிரபராதத் தன்மையை ருஜுப்படுத்தத் தைரியமில்லாமல் பயந்து இரங்கோனுக்கு ஓடி வந்து விட்டதாகவும், இவ்விடத்தில் தற்கொலை புரிந்திறக்கத் தீர்மானித்து விட்டதாகவும் தெரிவித்

---

பலவான் தகாத ஒன்றைச் செய்தால் கண்டுங் காணாததுபோல் இருந்து விடுதல், ஏழை செய்யினோ அதைப் பிரமாதப்படுத்துதல்.

திருந்தே னாதலால் எல்லோரும் என் கடிதத்திலுள்ள விஷயம் உண்மை யெனக் கருதியிருக்கின்றனர். என்னை இவ்வூரில் சந்தேகப்பட்டுப் பிடிப்ப வர்களில்லை யல்லவா ?

கிருஷ்ணவேணி :—நீ நல்ல உபா யமே செய்தாய். நீ தான் இராஜ சந்திரன் என்று இனி ஒருவரிட மும் எந்தக் காரணத்தை முன்னிட் டும் சொல்லாதே, யாரிடமும் குமார சாமி முதலியாரின் கொலையைப்பற்றி உனக்குத் தெரிந்ததாகவும் கூறாதே.

இராஜ சந்திரன்:— ஆம், நான் இது விஷயத்தில் அதிக ஜாக்கிரதை யாகவே நடந்துவருகிறேன். கடவுள் தான் என்மீது கிருபை வைத்து என்னைக் காப்பாற்ற முன்வந்து என் நிரபராதத் தன்மையை ருஜுப் படுத்த வேண்டும்.

என்று கூறிக்கொண்டேயிருக்கை யில் வீட்டினுள் சீனிவாச முதலியா ரின் குரல்கேட்கவே கிருஷ்ணவேணி திகிலடைந்தவளாய் "அண்ணா, நீ உடனே போய்விடு, அப்பா வந்து விட்டார்கள், இனி உனக்கு ஆபத்து நேரும், என்னை அம்மாவிடமே யிருக் கும்படி அப்பா கூறியிருக்கின்றார், நான் அங்கில்லாததைக்கண்டால் அவர் என்னைத் தேடிக்கொண்டு தோட்டத் திற்கு வருவாராதலால் நானிப்போது போகிறேன். இனி ஒரு நிமிடமும் இங்கிருக்க முடியாது. நாளைய மாலை நீ இங்கு வா, அப்போது உன்னிடம் எல்லாம் கூறுகிறேன்" என்று சொல் லிக்கொண்டே புறப்பட்டாள். அவள் போவதைக் கண்ட இராஜ சந்திரன் அவளை நிறுத்தி, "நான் குற்றவாளி யல்லவென்று கூறுவதை நீ இன்னும் நம்பவில்லையா? இப்போது நானும் நீயும் தனியாக இந்த ஏகாந்தமான தோட்டத்தில் பேசுகிறோம். நாம் பேசுவதை யாராறியாமற்போனபோதி லும் சகலத்திற்கும் கர்த்தாவும் பரப் பிரம்மமுமாகிய கடவுள் அறிகிறாராத லால் அவரறிய நான் அக்கொலையைச் செய்யவில்லை யென்று உண்மையாய்க் கூறுகிறேன். குமாரசாமி முதலியா ரைக் கொன்றவன் தங்கவேலுதான். நானதில் சம்பந்தப் படவேயில்லை யென்று கூறினான். இது சங்கதி நாளையதினம் பேசலாம், என்று கூறிக்கொண்டே கிருஷ்ணவேணி வேகமாக நடந்து வீட்டை யடைந்து பார்க்கையில் புறக்கடைக் கதவு சாத் தப் பட்டிருந்தது. அவள் மெதுவா கத் தட்டினாள். அப்பொழுது முதலி யார் யாரது என்று கேட்டுக் கொண்டே கதவைத் திறந்து கிருஷ்ணவேணியைக் கண்டதும் இராக்காலத்தில் தோட்டத்தில் என்ன செய்து கொண்டிருந்தாய் என்றார். அம்மாவிடம் உட்கார்ந்துக் கொண்டிருந்தேன். உடம்பு வேர்வை மிகுதியால் சகிக்க முடி யாமையால் காற்றைப்புசிக்க வெண்ணி தோட்டத்திற்குச் சென்று பென்சியின் (Bench) மீதுட்கார்ந் தேன். காற்றின் இனிமையால் மயங்கி நித்திரை யடைந்து விட்டேனென் றாள். இவள் கூறியதை யுண்மை யென்று நம்பி முதலியார் போசனத் திற்குச் சென்றார். மிதம் மீறிய கண் டிப்பாயுள்ள இடத்தில் பொய்யானது தானே தோன்றிக் கொள்கிறது. பொய்யின்றித் தப்ப முடிகிறதில்லை யாம். வீட்டுத் தலைவனை ஏமாற்ற எவ் வளவோ பொய்கள்! அவனும்எத்தனை யோ தடவைகளில் ஏமாறுமவில்லை.

---

இப்படியும் தன்னை நாசப்படுத்த வழிதேடினார்களே என்று ஒருவன் அங்கலாய்க்கிறான். ஆயினும், அந்த நாசத்தின் வழியிலேயே கடவுள் அவ னுக்குத் தப்பித்துக்கொள்ளவும் ஒரு வழியை யுண்டுபண்ணிவிடுகிறார்.

## அத்தியாயம்—5.

### கண்ணப்பனும் கிருஷ்ணவேணியும்.



மறுநாட் காலையில் கிருஷ்ணவேணி சாரதா விலாஸத்திற்கு வந்து கமலவல்லியைக் கண்டு க்ஷேமம் விசாரித்தாள். இதற்குள் வெளியிற் போயிருந்த கண்ணப்பனும் வந்து சேர்ந்தான். கண்ணப்பன் இவளைக் கண்டு வெகு அன்புடன் எப்போது வந்தாய் என்று விசாரித்துக்கொண்டே தனது உத்தியோக அறைக்குச் (Office Room) சென்றுன் கிருஷ்ணவேணியும் உள்ளே நுழைந்தாள். கமலவல்லி வேறு வேலையாகச் சென்றுள்.

கண்ணப்பன் :—என்ன காரியமாக இங்கு தனித்து வந்தாய்?

கிருஷ்ணவேணி:-ஓர் இரகசியத்தை உன்னிடம் கூறவந்தேன். நான் சொல்வதை வேறு எவரும் கேட்கலாகாது. கேட்டால் ஓர் பிராணனுக்கு ஆபத்து நேரிட்டுவிடும். நாம் தோட்டத்திற்குச் சென்று பேசுவதுநல்லது.

கண்ணப்பனும் அவ்விதமே கிருஷ்ணவேணியுடன் தோட்டத்திற்குச் சென்று அங்குள்ள நாற்காலியில் உட்கார்ந்தான். கிருஷ்ணவேணி மற்றொரு பெஞ்சியில் உட்கார்ந்தாள் இங்கு யாரும் வரமாட்டார்கள். நீ தைரியமாகச் சொல் என்று கண்ணப்பன் கூறினுன்.

கிருஷ்ணவேணி:—நான் உனக்கோர் ஆச்சரியமான சங்கதி கூறவந்தேன். என்னவெனில் இராஜ சந்திரன் இவ்வூரில் தான் சுகமாகயிருக்கிருன்.

கண்ணப்பன் :— இராஜசந்திரனு எவ்விடத்திலிருக்கிருன்? நீ அவனை யெப்போது பார்த்தாய்?

கிருஷ்ணவேணி:—அவன் உரிகத்தில் சுரங்கவேலையிலிருக்கிருனும். அவன் நேற்று மாலை ஓர் கூலி ஆள் போன்ற வேடத்துடன் என் வீட்டுப் புறக்கடையிலுள்ள தோட்டத்தில் வந்து என்னை சைகைகாட்டி யழைத்தான். நான் பயந்து உடனே மெதுவாகச் சென்று குரலினுலியால் இன்னுனெனத் தெரிந்துக்கொண்டேன். ஐயோ! அவனுடைய கதியை யென்னவென்று சொல்வது? திக்கற்ற ஓர் கூலியாள்போல் தன்னந்தனியனுய்க் காலத்தைக் கழித்துவருகிருன்.

கண்ணப்பன்:—ஐயோ பாவம்! அவன் கதி அப்படியாயிற்று. அவன் உன்னிடம் என்ன சொன்னுன்?

கிருஷ்ணவேணி:—அவன் என்னிடம் எவ்வளவோ சொன்னுன். அவற்றில் முக்கியமான தென்னவெனில், அபிராமியை அவன் காதலித்தது உண்மையே யாயினும், அவளுடைய தந்தையாகிய குமாரசாமிப் பிரபுவை அவன் கொல்லவில்லையென்று கடவுளின் மீது ஆணையிடுகிருன்.

இதைக் கேட்டு கண்ணப்பன் ஆச்சர்ய மடைந்தவனுகி சற்று நேரம் தலை குனிந்து தரையைப் பார்த்தபடியே எதையோ சிந்தித்துக் கொண்டிருந்து, பிறகு கிருஷ்ணவேணியை நோக்கி, அவன்

---

தாய்மாமன் வகையில் பெண்ணைக் கொடுப்பதில் விருத்தியில்லை யென்கிருர்கள். அது உண்மையே. ஆனுல் பெண்ணுக்கு இமிசை யில்லாதிருக்கலாம்.

என்ன சொன்னுன் என்று மறுபடி கேட்டான்.

அவன் கொலை செய்யவில்லை யென்றும், கொலை நடந்த அச்சமயத்தில் தான் அவ்வீட்டிலேயே யில்லை யென்றும் கூறினுன் என்று கிருஷ்ணவேணி உரைத்தாள்.

கண்ணப்பன் :—பின்னர் அக் கொலையையார்செய்திருப்பார்களாம்?

கிருஷ்ணவேணி :—தங்கவேலு என்ற பெயர்கொண்ட ஒருவன் செய்தானும்.

கண்ணப்பன்:—தங்கவேலா ...... அவன் யார்?

கிருஷ்ணவேணி :—அவன் யாரோ அவனுக்கும் தெரியாதாம். அவன் அபிராமியிடம் வருவதை என் அண்ணன் பல தடவைகளில் பார்த்திருப்பதாகக் கூறுகிருன்.

கண்ணப்பன் :— அப்படியாயின் உன் தமயன் நிரபராதியா?

கிருஷ்ணவேணி :—ஆம், அவன் சத்தியம் செய்து கூறுவதால் அவன் குற்றவாளி யல்லவென நான் நம்புகிறேன். அவன் மிகவும் கோழை மனமாகையால் தைரியமாகக் கொலை செய்திருக்க மாட்டான். இன்றைய இரவு அவனை மறுபடியும் என் வீட்டிற்கு வரும்படி கூறியிருக்கிறேன். நீ அச்சமயம் வந்தால் அவனைப்பார்க்கலாம். நீ சாமர்த்திய முடையவனுதலால் அவனுடன் பேசி அவன் கூறும் குற்றவாளியைக் கண்டுபிடிக்க முயல்வாயென நினைக்கிறேன்.

கண்ணப்பன் :—இராஜ சந்திரன் நேராக வந்து அதிகாரிகளின் முன்னிலையில் கூறலாகாதா?

கிருஷ்ணவேணி :—அவன் கூறினுல் யாரும்நம்பார்கள். அப்பா அவன் தான் கொலை செய்திருக்கிறுனெனக் கூறுகிறு ரல்லவா?...

கண்ணப்பன்:—இன்று மாலை நான் உன் வீட்டிற்கு வருகிறேன். அப்போது அவனைக்கண்டு பேசினுல் நலம்.

கிருஷ்ணவேணி:—அவன் என்னை ஐம்பது ரூபாய் கொடுக்கும்படி கேட்டான். என்னிட மில்லையாகையால் திகைக்கிறேன்.

கண்ணப்பன்:— உனக்கு இப்போது ரூபாய் வேண்டுமா?

கிருஷ்ணவேணி:— கொடுத்துதவினுல் பின்னுல் செலுத்துகிறேன்.

கண்ணப்பன்:—நான் பெட்டியில் ரூபாய் வைக்கிற வழக்கம்கிடையாது. இன்றையதினம் பாங்கிக்கு ஐம்பது ரூபாய்க்கு ஓர் செக் எழுதியனுப்பிப் பணம் பெற்று வந்து உனக்குத் தவருமல் கொடுக்கிறேன்.

கிருஷ்ணவேணி:—அவன் அம்மாளைப் பார்க்க விரும்புகிருன். அவன் வந்த சங்கதியை நான் இன்னும் அம்மாளுக்குக் கூறவில்லை.

கண்ணப்பன்:— நீ தைரியமாக அம்மாளுக்குக் கூறிவிடு. இன்றைய தினம் நான் தெருக் கதவை நன்ருகத் தாழ்ப்பாளிட்டுவிட்டு புறக்கடைவழியாக அவனையழைத்து வந்து உன் தாயிடம் பேசவிடுகிறேன். உன் தகப்பனுர் வருவதற்குள்ளாக இக்காரியம் நடக்கவேண்டும்.

கிருஷ்ணவேணி:—அது தான் எனக்கும் பயமாயிருக்கிறது. அவருக்குத் தெரிந்து விட்டால் மோசமாய்

---

ஒரு மனஸ்தாபத்தை மறப்பதற்குள் மற்றொரு மனஸ்தாபம் இடையே மூண்டுகொள்கிறது. பிறர் கூடயிருந்து மூட்டியும் விடுகிருர்கள்!

முடியுமே. உடனே போலீஸில் அவனை ஒப்புவித்து விடுவரே.

கண்ணப்பன்:— அதையெல்லாம் நான் பார்த்துக் கொள்கிறேன் என்றான்.

கிருஷ்ணவேணி அவனிடம் விடைபெற்று வீடு சேர்ந்து, இதுவரையில் நடந்த விஷயங்களையெல்லாம் தன் தாய்க்கு ஒன்றையேனும் விடாமல் கூறினாள். அவள் எப்போது மாலைக்காலம் வருமோ தன் புத்திரனைக் காண முடியுமோ என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

## அத்தியாயம்—6

### தங்கவேலு யார்?



அன்று மாலை சுமார் ஐந்து மணிக்கு பௌரிங்குப்பேட்டையிலுள்ள கிருஷ்ணவேணியின் வீட்டுக்குக் கண்ணப்பன் சென்றான். ஸ்ரீநிவாச முதலியார் தமது வழக்கம் போல் வெளியே போய்விட்டார். இவன் தன் அத்தையிடம் பேசிக் கொண்டே கெடியாரத்தை கவனித்தபடியே யிருந்தான். கிருஷ்ணவேணி கதவைத்திறந்து புறக்கடை தோட்டத்தில் நாட்டம் வைத்திருந்தாள். மாலை ஆறரை மணியானதும் இராஜசந்திரன் தோட்டத்திற்குள் வந்திருப்பதைக்கண்ட கிருஷ்ணவேணி மெதுவான குரலுடன் அதோ அதோ என்று சுட்டிக் காட்டினாள். இதைக் கேட்ட அவளது தாய் கண்ணப்பனை நோக்கி, என் மகனை இங்கே அழைத்துக் கொண்டுவா, என்னால் நடந்து வரமுடியவில்லை. நான் அவனைப் பார்க்க அதிக ஆவல் கொண்டிருக்கிறேன் என்றாள். கண்ணப்பன் உடனே எழுந்து தெருக் கதவை மூடிவிட்டு கிருஷ்ணவேணியுடன் புறப்பட்டுத் தோட்டத்திற்குச் சென்று இராஜசந்திரனைக் கண்டான். அவன் வேடமணிந்து கூலியாள் போல் காணப்படினும் அவனுடைய அழகு குறையாமலேயிருந்தது. அவன் கண்ணப்பனைக் கண்டதும் சந்தோஷமடைந்தவனாகி 'நான் இப்போது, என் தாயைப்பார்க்க முடியுமா' என்று கேட்டான்.

கண்ணப்பன்:— தடையில்லாமல் உன் சொத்தைப் பார்க்கலாம்.

இராஜசந்திரன்:—உள்ளே போகலாம் வாருங்கள். எனக்கிங்கு நிற்கப் பயமாயிருக்கிறது. கிருஷ்ணவேணி! நீ பணத்திற் கென்ன ஏற்பாடு செய்தாய்?

கண்ணப்பன்:— பணத்திற்குப் பயப்படவேண்டியதில்லை. இதோ நோட்டாக இப்பைக்குள் போட்டு வந்திருக்கிறேன் என்று ஓர் சிறிய காகிதப் பையைக் காட்டி விட்டு, நீ குமாரசாமி முதலியாரைக் கொல்லவில்லையா? என்று கேட்டாள்.

இராஜசந்திரன்:— உண்மையாக நான் கொல்லவேயில்லை.

கண்ணப்பன்:—நீ இது விஷயத்தில் உண்மையாக உனக்குத் தெரிந்தவைகளை யொன்றையேனும் விடா

---

பலவானுக்குக் கடன்கொடாதே. கொடுத்துத் திருப்பிக்கேட்க அவன் வீடுசென்றால் கன்னத்தில் அறை விழும். இந்தப் பலவான்கள் சிறைசென்று திரும்பினாலுங்கூட மூர்க்ககுணம் அவர்களைவிட்டுப் போவதில்லை.

பல் என்னிடம் கூறினால், யான் என்னைப் போன்ற அநேக லாயர்களிடம் யோசனை செய்து உன்னை விடுதலை செய்விக்க முயல்வேன்.

இராஜசந்திரன்:—நான் கூறுவதெல்லாம் முற்றிலும் உண்மையே. நான் அபிராமியை மணந்துக் கொள்ளப் பிரியப்பட்டு அவள் வீட்டிற்கு அடிக்கடி போய்க் கொண்டிருந்தேன். நான் என் தந்தையின் ஆதரவின் கீழிருந்த படியால் என் னிஷ்டப்படி உடனே அவளை மணந்துக்கொள்ள முடியாமல் சமயம் பார்த்துக் கொண்டே யிருந்தேன்.

கண்ணப்பன்:—அபிராமி உன்னை மணந்து கொள்ளச் சம்மதித்தாளா?

இராஜசந்திரன்—அவள் எனனிடம் வாய் விட்டுக் கூறவில்லை. அவள் சில சமயம் என்னிடம் அன்பாகப் பேசுவாள். சில சமயம் கடிந்து நாய் போல் மேலே விழுவாள். அவள் வேறொருவனை மணக்க ஏற்பாடு செய்திருந்ததாக நான் பிறகு கேள்விப்பட்டேன்.

கண்ணப்பன்:—அந்த வேறொருவன் யார்? அவனுடைய பெயரென்ன?

இராஜசந்திரன்:— அவனுடைய பெயர் தங்கவேலு.

கண்ணப்பன்:—தங்கவேலா? இதுவரையில் இவ்வூரில் அந்தப் பேரை நான் காதில் கேட்டதே யில்லையே.

இராஜசந்திரன்:—அவன் இவ்வூரிலிருப்பவனல்ல. பௌரிங்குபேட்டையிலிருந்து பிரதிதினம் மாலையிலும் அபிராமியைக் காண்பதற்காக வருவான். சில சமயங்களில் சைக்கிலிலுமேறி வருவான். அவன் வந்த போதிலும் யாரிடமும் பேசுவது கிடையாது. தன் பெயரையும் கூறுவது கிடையாது. அபிராமியிடம் பேசிவிட்டுப் போய் விடுவான். சில சமயங்களில் அவளை யழைத்துக் கொண்டு தோட்டங்களில் உலாவச் செல்வான்.

கண்ணப்பன்:—அப்பால் உன் சங்கதியைச் சொல்.

இராஜசந்திரன்:—குமாரசாமி முதலியார் என் துப்பாக்கியை வேட்டையாடக் கேட்டிருந்தார். நான் அதையெடுத்துக்கொண்டு கொலை நடந்த அன்றுமாலை வீட்டை விட்டுப் புறப்படுகையில் என் தந்தை என்னைப் பார்த்து விட்டுக் கண்டித்தார். நான் அவர்போகிற வரையில் காத்திருந்து போய்விட்டபின் வேகமாகப் புறப்பட்டு அபிராமியின் வீட்டுப் புறக்கடையிலுள்ள தோட்டத்தையடைந்தேன். அபிராமி தோட்டத்தில் அச்சமயம் உலாவிக்கொண்டிருந்தாள். அவள் என்னைக் கண்டதும் "இப்போது உன்னிடம் பேச எனக்கு அவகாசமில்லை. நீ வீட்டிற்குப் போ" என்றாள். நான் திடுக்கிட்டு நிற்கையில் லட்சுமணசாமி அவ்வழியாகச் சென்றான். அவன் என் கையிலிருந்த துப்பாக்கியைக் கண்டதும், ஏன் துப்பாக்கி கொண்டுவந்தாய் என்று கேட்டான். குமாரசாமி முதலியாருக்கு இரவலாகக் கொடுக்கக் கொண்டுவந்தேனென்று கூறினேன். அவன் போய்விட்டபின் அபிராமியுடன் நான் வலியவே பேச விரும்பி அவளிடம் சென்று துப்பாக்கியை யவளிடம் கொடுத்து, "இதோ என் துப்பாக்கி, இதில் மருந்துபோட்டு கெட்டித்திருக்கிறேனாதலால் அதிக ஜாக்கிரதையாக எடுத்துக்கொண்டுபோய்

---

நெஞ்சில் தீய இச்சை தோன்றும் பொழுது, உடனே அந்த இடத்தை விட்டு நீங்கிப் பலாது மத்தியில் போய் உட்கார்ந்து கொண்டால் மாறிவிடும்.

உன் தந்தையிடம் கொடு. நான் நாளையதினம் வருகிறேன்'' என்று கூறினேன். அவள் துப்பாக்கியை வாங்கிக்கொண்டு உள்ளே போய்விட்டாள். அவளை விட்டுப்பிரிய மனமில்லாமல் நான் அவ்விடத்திலேயே தோட்டத்தில் நின்றுகொண்டு அவள் மறுபடியும் வந்தால் பேசலாமென எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். அச்சமயம் தங்கவேலு யென்பவன் பைசைகிலேறி தோட்டத்திற்குள் நுழைந்து, பைசைகிலை ஓர் மரத்தில் சாத்திவிட்டு வேகமாக என்னைக் கவனியாமல் உள்ளே சென்றான். அவன் உள்ளே போவதை யான் மறைவிலிருந்து கவனித்துக் கொண்டே யிருக்கையில் மறுபடியும் லட்சுமணசாமி அங்கு வந்து என்னைக் கண்டு 'உன்னிடமிருந்த துப்பாக்கி யெங்கே, ஏன் இங்கே மறைவில் நின்று கொண்டிருக்கிறாய்' என்று கேட்டான். நான் அவனுக்கு யாதொரு பதிலும் கூறாமல் மெதுவாக நடந்தபடியே உலாவிக் கொண்டிருந்தேன். (இவனும் விசாரணை காலத்தில் யான் துப்பாக்கியுடனிருந்ததாக சாட்சி கூறியிருக்கிறான்) அப்பால் இருபது நிமிடத்திற் கெல்லாம் ஓர் சப்தம் கேட்டது. நான் திடுக்கிட்டுத் திரும்பிப்பார்க்கையில் எத்திராஜன் என் பின்னாலிருந்த மரத்தைவிட்டுக் குதித்து வேகமாக அபிராமியின் வீட்டிற்குள் நுழைந்தான். முன்பு எனக்குக்கேட்ட சப்தம் தான் குமாரசாமி முதலியாரைக் கொன்ற குண்டின் சப்தம். பத்து நிமிடத்திற் கெல்லாம் அதிக கடூரமான முகத்துடன் தங்கவேலு அவ் வீட்டினுள்ளே யிருந்து தோட்டத்திற்கு வந்து நாலா பக்கமும் திரும்பித் திரும்பிப் பார்த்துவிட்டு பைசிகிலேறி வேகமாகப் போய்விட்டான். எனக்கு அவனைவிட அதிக பலமிருக்குமாகில் அவனைமடக்கி யுதைத்து அச்சமயம் அவன்மீது எனக்கிருந்த வஞ்சத்தைத் தீர்த்துக்கொண்டிருப்பேன்.

கண்ணப்பன் :—இந்த தங்கவேலு என்பவன் பகற் காலத்தில் வருவதில்லையா?

இராஜசந்திரன் :—நான் பகற் காலத்தில் அவனைப் பார்த்ததில்லை. மாலைக்காலங்களில் தான் அபிராமியைக் காணவருவான். அன்றைய இரவு அவன் போய்விட்டபின் நான் அபிராமியின் வீட்டினுள் நுழைந்து பார்க்கையில் குமாரசாமி முதலியார் கூடத்தில் சுட்டுக் கொல்லப்பட்டுக் கிடந்தார். மார்பில் குண்டு பாய்ந்து இரத்தம் பெருகிக் கிடந்தது. என் துப்பாக்கி அவரருகே வீழ்ந்து கிடந்ததைப் பார்த்தேன். அதில் நான் போட்டிருந்த மருந்து செலவழிக்கப் பட்டிருந்தது. உடனே நான் அவ் வீடு முழுதும் சென்று அபிராமியைத் தேடினேன். அவளகப்படவே யில்லை. வீட்டில் ஒருவருமே அச்சமயம் காணப்படாமையால் எனக்கதிக பயமாய்விட்டது. நான் மிகவும் பயங்காளி யென்பது உனக்கும் தெரியும். இராக்காலங்களில் தனியாக வெளிச் செல்லப் பயப்படுவே னல்லவா. நான் சிறிதுநேரம் குமாரசாமி முதலியாரைப் பார்த்துவிட்டு என் துப்பாக்கி அருகிலிருந்தால் நானே கொலை செய்தவனெனக் கருதுவார்களெனப் பயந்து துப்பாக்கியை எடுத்துக் கொண்டு வேகமாக வெளியில் வந்தேன். அச்சமயம் லட்சுமணசாமி என்னைக் கண்டு யார் அங்கே போகிறது, நில் நில் என்றான். நான் பயமடைந்து துப்பாக்கியை வீசி எறிந்துவிட்டு வேகமாக ஓடினேன். அவன் என்னைச்சிறிது தூரம் துரத்திவந்தான். யான் அவன் கைக்கு அகப்படாமல் தப்பித்துக்கொண்டோடிப்போய்விட்டேன்.

(தொடரும்.)

# குடும்ப விநோதக் குறள்.

## 4. குடும்ப கலகம்.

1. குடும்பக் கலகம் குடித்தனத்தின் சீரை
இடிக்குங் கடப்பாறை யே.

2. பலபெரிய வீட்டிலும் மண்ணுடைப்பு தானே
கலகமிலா வீடேது காட்டு.

3. உப்புப் பெறாத ஒருசின்ன சங்கதியில்
குப்பென்று சண்டை தொடங்கும்.

4. 'சிறுக்கி மயக்கால் சீர்கெட்டா' னென்று
தருக்கிக் குதித்திடுவாள் தாய்.

5. பெண்டாட்டி யாத்தாள் பெரியாத்தாள்; செய்திடும்
திண்டாட்டம் சொல்லிமுடி யாது.

6. 'அறுக்கவே நான் பிறந்தேன் ஐயே இவ் வீட்டில்
இருக்கவோ?' என்றுசலிப் பாள்.

7. பணமில்லா வீட்டாலே பாய்ந்துவருஞ் சண்டை
குணமாம் பணங்கூடி னால்.

8. கட்டாயம் சேர்வர் கனஅன்பால்; வற்றினால்
வெட்டொன்று துண்டமிரண் டே.

9. கலக மனஸ்தாபம் கண்டவர்க ளெல்லாம்
நலமாக வாரியதென் நாட்டு.

10. நகைப்பைக் கெடுத்து நலங்கெடவைக்கும்
பகையும் ஒருபிழைப் பா.

T. S. குழந்தைவேல் முதலியார்.

---

தனக்குப் பிறந்த குழந்தைகள் பெண்ணுகவே ஆனதற்கு வருந்திய ஒருவர் தனது தமயனிடம் அவரது குமாரரில் ஒருவனைச் சுவீகாரம் தருமாறு கேட்க, அதற்குத் தமயன் இன்னும் பத்துவருஷம் சென்று நீ கிழவனான பிறகு பேசிக்கொள்ளலாம் என்றார். அதற்குள் ஆண் குழந்தை தன் தம்பிக்குப் பிறக்கலாமென்பது அவரது எண்ணம்போலும். என்னதான் அண்ணனின் குழந்தையை ஸ்வீகாரம்கொண்டாலும் தன் வயிற்றுக் குழந்தையாகுமா?

# மூளைக்கு விருந்து.

1. ஓர் அரசன் தன் தோட்டத்திற்குப் போகும்போது தன்னுடனே தன் ஜனங்களையும் அழைத்துச் சென்றான். அத்தோட்டத்தில் எட்டு வாசல் களுண்டு. முதல் வாசலில் அரசனையும் சேர்த்து 9-ல் ஓர் பாகத்தையும், இரண்டாவது வாசலில் 8-ல் ஓர் பாகத்தையும், மூன்றாவது வாசலில் 7-ல் ஓர் பாகத்தையும், நான்காவது வாசலில் 6-ல் ஓர் பாகத்தையும், ஐந்தாவது வாசலில் 5-ல் ஓர் பாகத்தையும், ஆறாவது வாசலில் 4-ல் ஓர் பாகத்தையும், ஏழாவது வாசலில் 3-ல் ஓர் பாகத்தையும், எட்டாவது வாசலில் 10-ல் ஓர் பாகத்தையும் நிறுத்தி மீதமுள்ள ஜனங்கள் தோட்டத்திற்குள் சென்றவுடன் தோட்டக்காரன் வைத்திருந்த சீத்தாப்பழங்களில் அரசன் ஒன்றும்; மந்திரி இரண்டும்; சேவகன் மூன்றும்; இவ்விதமாக அரசன் பிறகே வந்த ஜனங்க ளெல்லாம் ஒவ்வொரு பழம் அதிகமாகவும் எடுத்துக்கொண்டார்கள். அதன் பின்பு அரசன் தன் ஜனங்களை எல்லாம் அழைத்துக்கொண்டு வெளியே வந்தவுடன் வாசலில் இருந்த ஜனங்களெல்லாம் அரசனைப் பார்த்து தங்கள் பிறகே வந்தவர்களெல்லாம் பழங்கள் கொண்டுபோகிறார்கள். எங்களுக்கு இல்லையா என்றார்கள். அரசன் ஜனங்கள் கொண்டுவந்த பழங்களை எல்லாம் கீழே வைக்கச்சொல்லி தான் கொண்டுவந்த பழத்தையும் சேர்த்து ஆளொன் றுக்கு ஒவ்வொரு பழம் வீதம் கொடுத்துத் தானுமொருபழம் எடுத்துக் கொண்டபின் பழங்களும் மீதமில்லாமல் சரியாகவிருந்தது ஆதலால், அரசன் பிறகே வந்த ஜனங்களெத்தனை? தோட்டத்திற்குள் போன ஜனங்களெத்தனை? குறிப்பு: ஜனங்களோடு அரசனையும் சேர்த்துக்கொள்ளவும்.

2. இராவணன் சிரசற்றதேன்? இராவெள்ளி மறைவதேன்?

3. விஷ்ணுவுக்குரிய ஓர் மதியும் வாரமும் எவை?

4. வாயுவை விட வேகமானதெது?

5. மூன்றெழுத்துப் பெயர்:—முன்னிரண்டும் சேரில் குதிரை; முத லுங்கடையும் சேரில் கொழுநன்; கடையும் இடையும் சேரில் ஓரெண்; முத லும் நடுவும் கடையும் சேரில் சூரியன். இப்பெயரெது?

6. ஓர் எண்ணைக்கொண்டு மற்றொரு எண்ணினால் வகுத்தாலும், அல் லது அந்த இரண்டு எண்களையும் எழுதிக்கழித்தாலும் ஒரே தொகை வரும். இந்த எண்கள் இரண்டுமெது?

7. எட்டெழுத்திலோர் ஸ்தலப்பெயர்:—1-ம், 2-ம், சேரில் மேன்மை; 3-ம், 4-ம் சேரில் எதிர்மொழி; 5-ம், 6-ம், சேரில் வாசனை; 7-ம், 8-ம், சேரில் வேர். இப்பெயரெது?

---

நம்மைக் காணவந்தவர் சீக்கிரத்தில் புறப்படாவிட்டால், நாமே வெளியே புறப்படுவதுபோல் தயாராகி, என்ன எழுந்திருக்கிறீர்களா என்றால், அவர்க ளும் உடனே புறப்பட்டுவிடுவர். அவர்கள் போனபின்பு நாம் போட்ட சட் டையைக் கழற்றிவிட்டு உட்காரலாம். இவர்களெல்லாம் பிறரது காலத்தின் அருமையைத் தெரியாதவர்கள். சீக்கிரம் எழுந்து போகும்படி பேச்சை முடித்து எவ்வளவோ ஜாடையாகக் காட்டினும் உணர்வதில்லை.

8. ஒரு புடவையின் விலை இருபது ரூபாய்; ஒரு புத்தகத்தின் விலை ஒரு ரூபாய்; ஒரு பென்சிலின் விலை நான்கணு; ஒருவன் நூறு ரூபாய்க்கு நூறு உருப்படிகள் வாங்குகிறுன். வகைக்கு எத்தனை வாங்குகிறுன்?

அரவக்குரிச்சி—S. K. பிச்சை முத்துராஜா.

☞ சென்ற ஸஞ்சிகையில் 442-ம் பக்க விஞக்களுக்கு விடை:—

(1) திசை 1. கொல்லன் வீட்டிற்கும், நெய்வோரின் வீட்டிற்கும் மத்தியில். திசை 2. பூந்தோட்டத்திற்கும், வாழைத்தோட்டத்திற்கும் மத்தியில். திசை 3. இடையர் வீட்டிற்கும், குலாலன் வீட்டிற்கும் மத்தியில். முப்பால்:—நீ அப்பால், நான் இப்பால், நடுவே தாழ்ப்பால்.

(2) பாதிரி. (3) பறக்கும் கதலி யென்ற பெயர் காற்ருடிக்கும் விருதுக்கொடிக்குமுண்டு. (4) விடைக்காக. விடைக்காக. (5) 3 மோதிரத்தின் விலை ரூ. 60. 21-கதர் வேஷ்டியின் விலை ரூ. 21.76-நோட் புஸ்தகத்தின் விலை ரூ. 19. ஆக இரண்டும் நூறுவீதமாகும். (6) மேகஇடி, கீரி, கருடன். (7) பறக்கும் வௌவால்.

## மிச்சம் வருவதில்லை!

சிலரிடம் ஒரு காரியத்துக்காகப் பணம் கொடுத்தால் செலவானது போகப் பாக்கிப் பணம் வருவதில்லை. சிலர் ஒரு ஊருக்குப் போகும்போது ஏதாவது வாங்கிவரும்படி அவர்களிடம் பணம் கொடுப்பதில் நாலு சாமான்கள் சொல்லியதற்கு இரண்டு சாமான்கள் வாங்கிவந்து மற்றது கிடைக்கவில்லை யென்கிருர்களே தவிர, கிடைக்காததற்கென்று கொடுத்த பணத்தை அவர்கள் திருப்பித் தருவதில்லை. அதை ஒரு கணக்காக எண்ணிக் கேட்பதற்கும் பணம் கொடுத்தவர் பின்னடைந்து மௌனமாகிருர். பணம் போனுலும் அவர்களுடைய குணபாவம் தெரிந்துவிடுகிறது. ஊருக்குப் போகிறவரிடம் முழுப்பணம் கொடுத்து வாங்கிவரச் சொல்வதைவிட, கால்பகுதிப் பணத்தை முன்னர் கொடுத்து, பிறகு அவர் வாங்கிவந்த பிறகு அவற்றிற்குக் கணக்கிட்டுப் பாக்கியைத் தருவது மேல். இவ்விதமே மாமியிடம் மருகி கடைச்செலவுகள் வாங்கிவரும்படிக் கொடுத்த பணத்திற்கு மிச்சம் வருவதில்லை; கேட்கவும் முடிகிறதில்லை. தந்து—மனஸ்தாபம்.

ஒரு பொதுக் காரியத்துக்கு உதவி செய்யுங்கள் என்று பத்திரிகையில் எழுதும் வாக்கியத்தைக் கவனிப்போர் லக்ஷத்தில் எங்கேயோ ஒருவர் தான்.

# குளவி தன்னிறமாக்குமா?



குளவி புழுக்களைத் தன் கூட்டிற்குக் கொண்டு போய்வைத்து, சிறிது சிறிதாக அப்புழுவினின்று தன்னைப் போன்ற ஒரு குளவியை உற்பத்தி செய்கிறதென்று சொல்லுகின்றனர். கடவுள் சிருஷ்டியில் ஒரு பிராணி மற்றொரு பிராணியை உற்பத்தி செய்ய முடியுமா? இதன் உண்மையைப்பற்றி ஆராய்வோம்.

ஃ

புழுவிலிருந்து குளவி உண்டாகுமா? அதாவது ஒரு ஜந்துவினின்று சிறிதும் அதற்கு ஒற்றுமையில்லாத மற்றோர் ஜந்து உற்பத்தியாகுமா? இந்தக் கேள்வி கற்றறிந்த முன்னோர்களாலும், இப்பொழுதுள்ள தத்துவ சாஸ்திரிகளாலும் ஆராய்ச்சி செய்யப்பட்டிருக்கிறது.

ஃ

சில பிராணிகள் அழுகுகிற வஸ்துக்களினின்று உண்டாவதாகவும், சில பூச்சிகள் செடிகளின் மீது மழைத்துளிகள் விழுவதனால் உற்பத்தியாகிறதாகவும், வயிற்றிலுள்ள நாக்குப் பூச்சிகள் கிணறுகளிலுள்ள சேற்றினின்றும்—ஓடுகிற ஜலத்தினின்றும்ஜனிப்பதாகவும்அரிஸ்டோட்டில்(Aristotle) என்பவர் சொல்லியிருக்கிறார். மேலும், உடம்பின் அழுக்கினின்று மூட்டுப் பூச்சியும், மாம்ஸத்திலிருந்து பேன்களும் பிறப்பதாகச் சிலர் சொல்லுவார்கள். இவ்வகைப் புதுமைத் தோற்றத்தைப்பற்றி நம் நாட்டவரும் கூறுவதுண்டு. உதாரணமாக, வாழைக் குருத்தைத் தின்றாலும், கொடுக்காப்புளியைத் தின்றாலும் நாக்குப் பூச்சி ஜனிக்கும் எனவோர் கொள்கை நம்மவர் சிலரிடத்துண்டு.

ஃ

யதார்த்தமான விசாரணைகளின் பயன்களால் இத்தகைய புதுமைத் தோற்றம் பொய். மேற்கூறிய வஸ்துக்களினின்று மேற்கூறிய ஜந்துக்களும், பூச்சிகளும், புழுக்களும் சிற்சில சந்தர்ப்பங்களில் உற்பத்தியாகிறதில்லையென ரேடி, (Redi) பாஸ்டூர், (Pasteur) பர்சி பிராங்க்லேன்ட், (Percy Frankland) முதலிய உயிர்நூற் புலவர்கள் வெளிப்படுத்தியிருக்கின்றனர். அதாவது, பெரிய ஜந்துக்கள் தாயினின்றல்லாமல் மற்றைய வஸ்துக்களின்றும் பிறப்பதில்லை என நிச்சயிக்கப்பட்டது.

ஃ

ஆனால், வாந்திபேதி, கொள்ளை நோய் முதலியவைகளுக்குக் காரணமான சில விஷப்பூச்சிகளின் விஷயத்தில் சில கற்றறிந்தோர் புதுமைத் தோற்றமென்றே அபிப்பிராயப் படுகின்றார்கள். காபி, தேயிலைத் தண்ணீர், ஜவ்வரிசி, கோதுமைக் கஞ்சி முதலியவைகளை அநேக நாழிகை குளிரும்படியாகத் திறந்தாகிலும் மூடியாகிலும் வைத்திருந்தால், மேற்சொன்ன விஷப்பூச்சிகளின் ஜாதியைச்சேர்ந்த சில பிராணிகள் ஜனிக்கின்

---

ஒவ்வொருவனுக்கும் ஒவ்வொரு நோய் ஆஸ்தியாக இருக்கிறது. கடைசியில் மரணமும் அதனாலே. அதுவே கடவுள் தந்த பெரிய சொத்து போலும்

றன. [இது பற்றியே ஆங்கிலவைத்தியர்கள் அவ்வகை உணவுகளைச் சூட்டுடன் உட்கொள்ள வேண்டுமென்று கூறி யிருக்கின்றனர்.] தாயின்றி அவைகள் உற்பத்தியாகிறபடியால் பிராணிகளில் புதுமைத் தோற்றம் உண்டெனச் சிலரால் நம்பப்படுகிறது. இது தவறே. காற்றில் இப்பூச்சிகளின் அணுப்பிரமாணமான முட்டைகள் இங்குமங்கும் பறக்கிறதனுலும், மேற்கூறிய தண்ணீர்களும், கஞ்சிகளும் குளிர்ச்சி யடைந்தால் அப்பொழுது அம் முட்டைகளிலிருந்து பூச்சிகள் உண்டாவதற்குத் தகுந்த இடமாயிருப்பதனுலும் காற்றுள்ள போதே தூற்றிக்கொள் என்ற பழமொழிக்கேற்ப அவைகள் தங்கித் தங்கள் சாதியை அபிவிருத்தி செய்கின்றன. இது பரிசோதனையினுல் உண்மையாக அறியப்பட்ட விஷயம்.

ஃ

இது நிற்க, இனி குளவியைப், பற்றிக் கவனிப்போம்-குளவி, எறும்பு முதலிய பூச்சிகள் மிக்க சுபாவ உணர்ச்சி யுள்ளன. பெண் குளவிகள் முட்டைவைப்பதற்குமுன் மரங்களிலாவது, அல்லது சுவர்களில் முடுக்கிடங்களிலாவது மண்ணினுல் குழல் போன்ற கூடுகளைக்கட்டும். தன் குஞ்சுகளின் இரைக்காக ஏதாவது ஒரு புழுவைத்தேடி எடுத்து வந்து அக்கூட்டில் வைக்கும் புழுவின் ஞானமும் ஸ்மரணையும் இல்லாதபடி தன் பின்புறத்திலுள்ள விஷக்கொடுக்கினுல் அப்புழுவின் மூளையில் கொட்டி அதன் புத்தியைக் கெடுக்கும். இந்தச் செயலின் விளைவு என்னவென்முல், புழுவினுக்குப் பாரிசவாயு உண்டாகிறது; நகருகிறதற்கு முடியாது. இரைவேண்டுமென்ற உணர்வு கெடும். அது உயிர் துறக்காது; அதன் சதை முதலியன அழுகாது. [புழுவை மட்டுமல்ல, தத்துக்கிளி முதலிய அநேக ஜந்துக்களையும் குளவி இப்படி உபயோகப்படுத்தும்.] பின்பு அப்புழுவின் உடம்பில் ஓரிடத்தில் காயம் பண்ணி, அந்தக் காயத்தில் தன் முட்டையை வைக்கும். இக்காரியங்களையெல்லாம் செய்த பின்பு, அக்கூட்டை நன்ருகக் களிமண்ணுல் மூடித் தத்தம் தின கருமங்களில் முன்போல ஊக்கமாயிருக்கும். ஃ

சில நாளைக்குப் பின் முட்டை வெடிப்பதனுல் அதற்குள்ளிருந்து ஒரு புழு உண்டாகும். அதற்கு உணவு முன்னிருந்த பாரிச வாயுப் புழுவே. பசித்தபோதெல்லாம் கொஞ்சமாய்த் தனக்கு வேண்டிய வளவு தின்று தினம் தினம் சரீரத்திலும் வர்ணத்திலும் வேறுபாடு உண்டாகி, தாய் போன்ற நிறமும் லக்ஷணமு மடைந்து கூட்டினின்று சிறிய குளவியாக வெளிப்படுகின்றது. இப்படி வெளிப்படும் சமயம் வரையில் தாய்வைத்துப் போன உணவு உபயோகப் படுகின்றது. வேண்டிய உணவு சேகரித்து வைக்கும் தாயின் அறிவு மிக்க ஆச்சரியப்படத்தக்கதே! ஃ

ஆகையால், குளவி தன்னிற மாக்கும் என்ற பழமொழியைப் பற்றிப்பொதுவாக மாந்தர்சொல்லுபவை பிழையாமென்று அறியத்தக்கது.

---

"நாங்கள் ஒவ்வொரு நிமிஷத்தையும் எண்ணிச் செலவிடுகிறோம். இப்பொழுது பிறர்பொருட்டுச் செலவிடும் நிமிஷங்களுக்கு நாங்கள் இரவில் வெகு நேரம் விழித்து வேலை செய்யவேண்டி யிருக்கிறது. ஆதலின், தங்களுடன் பேசுவதற்கு எவ்வளவு நிமிஷங்கள் தேவையென்பதைத் தயவுசெய்து தெரிவியுங்கள் இப்படிக் கேட்டதற்குக் கோபித்துக் கொள்ளாதீர்கள்."

# தீபாவலியில் தயாரஸம்.



நான் ஒரு சமயத்தில் "நன்மையாவதென்ன" என்று ஒரு விதமான ஸந்தேகங் கொண்டவனாகி அதைப்பற்றிப் பலரையும் கேள்வி கேட்கலானேன்.

அதற்கு 'சட்டதிட்டங்களுக்கு அடங்கியிருப்பதே நன்மையாகும்' என்று நியாய ஸபையார் மறுமொழி சொன்னார்கள்.

'காங்கிரஸில் சேர்வதே அதிக நன்மை' என்று தேசபக்தர்கள் மொழிந்தனர்.

'உள்ளே அன்பின் பசையற்று வெளியில் மட்டும் மிக்க வேண்டியவர்கள்போல் நடிப்பவர்களை விட்டு விலகுவதே நன்மையானது' என்று பட்டறிந்தவர்கள் சொன்னார்கள்.

'கல்வி யறிவே நன்மையாகும்' என்று வித்தியாசாலைத் தலைவர்கள் விடை கொடுத்தார்கள்.

'உண்மையை யுரைத்தலே நன்மை' என்று அறிவுடையோர் உத்தரஞ் சொன்னார்கள்.

'வினோதமும் விளையாட்டுமாயிருப்பதே நன்மை' என்று வேடிக்கைப்பிரியர்கள் விடை பகர்ந்தார்கள்.

'எதிலும் தான் பட்டுக்கொள்ளாமல் ஒதுங்கியிருப்பது நன்மை' என்று பிரபல யுக்திசாலிகள் கூறினர்.

'ஸ்திரீ புருஷர்கள் ஒருவர்மேலொருவர் ஆசையோடிருப்பதே நன்மை' என்று யுவக-யுவதிகள் பேசினர்.

'அழகே சிறந்த நன்மையாம்; அது எதிலும் வெற்றிதரும்' என்று ரூபஸம்பன்னர்கள் நவின்றனர்.

'யதேச்சையா யிருப்பதே நன்மை' என்று வீண் மனோராஜ்ஜியம் செய்பவர்கள் விளம்பினர்.

'வீட்டில் வாழ்வதே நன்மை' என்று காட்டில் திரியும் ஆண்டிகள் உரைத்தார்கள்.

'புகழே பெரிய நன்மை' யென்று போர்வீரர் விடை கூறினார்கள்.

'நடுவு நிலைமையாக நடப்பதே நன்மை' என்று தீர்க்க தரிசிகள் புகன்றார்கள்.

இத்தனைபேர் இத்தனை விதமான ஸமாதானங்கள் சொல்லியும் 'சரியான விடை கிடைக்கவில்லையே' என்று என் மனம் வாடி விசனப்பட்டு வருந்தியது. அப்படிப்பட்ட தருணத்தில் என் ஹிருதயத்தினுள்ளாக மெதுவான குரல் ஒன்று கிளம்பி, 'அன்புடைமை அல்லது தயாரஸமே உத்தமமானது' என்று உரைத்தது. எனக்கும் இந்த விடை திருப்தியாயிற்று. இதை வாசிக்கும் உங்கட்கும் இது திருப்தியாகவே இருக்கும். ஆதலின், நீங்கள் தயாரஸ பூர்ணர்களாய் அதனை நடத்தையில் காண்பிக்குமாறு வேண்டிக் கொள்கிறேன். தீபாவலியில் எவ்வுயிருக்கும் துன்பம் விளைக்காமல் தயாரஸ ஸம்பன்னர்களாய்ப் பண்டி

கையின் குதூகலத்தை அநுபவிக்குமாறு பிரார்த்தித்துக் கொள்கிறேன்.

ஃ

காலிபோர்னியாவிலே அநேகர் தாம்தாம் தின்ற மாமிசமே தங்களுக்கு விஷமாகித் துன்ப மடைந்தார்கள் என்று செய்தி பரவிற்று. அவர்களில் ஒருவருக்குச் சிகிச்சை செய்யப்போன வைத்திய சாஸ்திரி, அந்த நோயாளி புசித்தது எந்த ஜீவனுடைய மாமிசமோ, அது கொல்லப்படுங் காலத்தில்எப்படிப்பட்டநிலையிலிருந்ததோ, அவ்விஷயங்களை நுட்பமாக விசாரித்தறிய ஆவல் கொண்டார். அப்படியே விசாரணை செய்ததில், அது ஒரு பெரிய எருதின் மாமிச மென்றும், அந்த எருது கொல்லப்படுங் காலத்தில் ஒரு நோயு மில்லாமல் தேக சௌக்கியத்துடனே மிகவும் பலசாலியாயிருந்த தென்றும் அதை யடித்த கசாப்புக்காரன் சொன்னான். ஆனால், கொல்வதற்காகக் கொண்டுவரும் பொழுது அந்த ஜீவன் தன்னுயிரைக் காத்துக்கொள்ள மிகுந்த மூர்க்கத்துடனும் தைரியத்துடனும் போராடிய போராட்டம் இவ்வளவென்று சொல்ல முடியாதாம். தன்னைப் பிடிக்க வந்தவர்களை வெகு தீரமாய் எதிர்த்துத் தன்னாலான அளவு பாடு பட்டதாம். இரண்டொரு மணி நேரம் வரையில் உரத்து முக்காரம் போட்டும், கால்களால் நிலத்தை யறைந்தும்; இன்னும் தன்னால் கூடுமான பல முயற்சிகள் செய்தும், தன் பிராணனைக் காப்பாற்றிக் கொள்ளக் கஷ்டப்பட்டதாம். ஐயோ! கடைசியில் அந்த எளிய ஜீவன் கொலையாளி கையில் அகப்பட்டுக் கொலையுண்டது. அதனுடைய மாமிசமே விற்பனையானது.

ஃ

அந்த ஜீவன் தன் பிராணனைப் பாதுகாத்துக் கொள்ளப் பலவிதமாகப் போராடியதனாலும், அதைக் கொலையாளி தன் கைவசமாக்கிக் கொள்ள அதிகமாய் அடித்து இம்சித்து அகோரமாய்ப் புண்படுத்தியதினாலும், அந்த எளிய ஜீவனுடைய உதிர மெல்லாம் பொங்கி நோய்க்கிடமாகி, அதன் மாமிசம் முழுமையும் விஷமாகி விட்டதென்று முடிவு செய்தார். கொல்லப்படுங் காலத்தில் வாயில்லா ஜீவன் படும்பாட்டை நாம் இங்கே சிறிதளவே சொன்னோம். முழுமையும் எடுத்துச் சொல்லக் கை நடுங்குகின்றது. ஒரு ஹோட்டலில் ஏக காலத்தில் பத்து கோழிகள் கழுத்தறுக்கப்பட்டுத் துடி துடிக்க நிலத்தில் வீசி எறியப்பட்டன. ஹா! என்ன பரிதாபம்! ஒரு ஆட்டைக் கொல்லுகையில் அந்த ஆடு எவ்வளவு பதை பதைத்துக் கால்களால் அடித்துக்கொண்டு சித்திரவதைப் படுகின்றது! வாயில்லா ஜீவன்களின் இறைச்சி விஷமான செய்தி ஒரு புறமிருக்கட்டும்; அவை கொலைபாதகர் கையில் அகப்பட்டுப் பிராணனைப் பறிகொடுக்கும் தருணத்தில் படும் இம்சைகள் முழுமையும் காது கொடுத்துக் கேட்பார்களானால், அப்படிப் பட்ட ஜீவன்களின் மாமிசத்தை எப்படிப்பட்ட கொடிய நெஞ்சர்களும் புசிக்கத் துணியார்களென்று நான் நிச்சயமாய்ச் சொல்லுவேன். தயாரஸமே கடவுளுக்குப் பிரீதியானது. அதை நிகழ்ச்சியில் காட்டுங்கள்.

---

உமது மக்களை நான் காப்பாற்றுகிறேனென்று ஒருவனுடைய மரண காலத்தில் அவனுக்கு உறுதிமொழி தந்து தேற்றுவது ஒரு விஷயம். ஆனால், நடவடிக்கையில் அந்த உறுதிமொழி எவ்வளவுவரையில் நிறைவேறி உபயோகப்படக்கூடியதாய் இருக்குமென்பது வேறு விஷயம். மாறாத மனம் அபூர்வம். கால சந்தர்ப்பங்களும் வெவ்வேறு விதமாக வரும்.




# பத்திரிகா பிரயோஜனம்.

1. படித்த பெண்மணி—கொம்மி அடித்த கண்மணி
பிடித்த கற்பு விரத நாளும் பேணு மம்மணி !

2. இந்தியா விலே—நம்ம பந்தி மாதர்கள்
சிந்தியார்களோ எழுத்துச் சேதிப் பத்திரிகை ?

3. ஓங்கி யுலாவும்—மே லாங்கிலப் பெண்கள்
பாங்கில் யாமுந் தீங்கில்லாமல் படிப்போம் பத்திரிகை.

4. உத்தமக் குணம்—பெறும் பத்தினிப் பெண்கள்
ஒற்றுமைச் சிரத்தை காட்டிப் பத்திரிகை பெற்றால் ;

5. தேசயோகமே—கன ராஜ ரீகமே
பேசுமிந்தி—யாசிலாக்யம் பெறும நேகமே.

6. பெண்கள் கல்வியால்—வெகு பங்க முண்டென்று
சங்கங் கூடிப் பேசிப் பேசி தடுத்தல் ஞாயமா ?

7. அறிவு வேறுதான்—படிப் பதுவும் வேறுதான்
நெறி தெரிந்து பேசவேணும் நியாய வான்களே,

8. பாதி பாதியே—நாம் படைத்த கியாதியே.
சேதி நீதி ஆண்கள் மட்டுந் தெய்வ பக்ஷமா ?

சரபம்—முத்துஸாமிக் கவிராயர்

---

பையன்கள் பாடசாலைக்குச் செல்வதில் தடை ஏற்படுவதில்லை. சிறுமிகள் வீட்டின் சில்லரை வேலைகட்கும், குழந்தையைத் தூக்கிக் கொள்ளவும் தாய்மார்க்கு உதவியாக இருப்பதால், பல தாய்மார் தங்களின் வீட்டு வேலைக்காகவென்று அடிக்கடி சிறுமிகளைப் பள்ளிக்கு அனுப்பாது நிறுத்திக்கொள்கிறார்கள். புருஷனும் மனைவியுமான ஒண்டிக் குடித்தனத்தில் வீட்டுக்காரி மாதவிலக்கானால், அன்று புத்திரி சமைக்க வேண்டியதாகிப் பள்ளிக்கூடம் தவறுகிறது. காலையில் கழுநீர் கொண்டு போகவும், பாத்திரங்கள் தேய்க்கவும், வீட்டைக் கூட்டவும், இரவில் கைக்குழந்தையைத் தொட்டிலாட்டவும் பொழுது சரியானால் படிக்க நேரம் எங்கே ? பெரும்பாலும் 14-15-வயதுக்குள் பெண்கல்வி முடிந்துவிடுகிற கேவல நிலையில், இடையிடையே பள்ளிக்கூடம் செல்வதும் தடைபடுவதாயின் பெண்கல்வி விருத்தியாவதெவ்வாறு ?

# மங்களவல்லி



"அடி மங்கி! இங்கே வாடி. இது வரையில் நீ ருத்திராக்ஷப் பூனைபோல் வேஷங் காட்டி என் வீட்டிலுள்ள பொருளை யெல்லாம் பெருச்சாளிபோல் தின்று நாசம் செய்த ஆட்டபாட்டமெல்லாம் இனிமேல் நடக்கமாட்டாது."

மங்களவல்லி:—என் அருமையான தாயையொத்த மாமி! இதோ நமஸ்காரம் செய்தேன். இதுவரையிலும் யாது குற்றமும் யான் செய்யாதிருக்க, இப்போது செய்ததாகச் சொல்லுகிறதினால் அது தெரியச் சொல்ல வேண்டுகிறேன்.

மாமி:—அடி மங்கி! என்னடி வர வரக் கெட்டுப்போனாய்? "வந்ததே சிறுக்கி பந்தடித்தாள் — வர வரச் சிறுக்கி கழுதை மேய்க்கிறாள்" என்பதாக ஆச்சுது. கொஞ்சம் இடங் கொடுத்தால் மடம் பிடுங்குகிறை. மேலும், "கிட்டவா நாயே என்றால் மூஞ்சியை நக்க வருகிறை." இந்தப் பசப்பு வார்த்தை யெல்லாம் என்னிடத்தில் நடவாது. "உருக்கமுள்ள சிற்றத்தை ஒதுக்கில்வாடி கட்டியழ" என்பதாக ஏதோ உருக்கமாகப் பேச வருகிறை. இதையெல்லாம் உண்டிட்டுவா என்பேன். சும்மா வித்தை காட்டி எத்துகிறதற்கு நான் இளிச்ச வாய்ச்சி அல்ல. "ஆர் குடியைக் கெடுக்க இந்த ஆண்டிவேஷம் போடுகிறை?" அது இருக்கட்டும். இதென்ன நீ விபரீத குடித்தனம் பண்ணுகிறை? அது என்ன காரணம்? "அச்சுக்கெட்டுத் தச்சுமாறிப் போச்சுதோ?" நீ தின்னுகிற கொழுப்பு உன் கண்ணை மறைக்கிறதா? என்னடி ஒன்றும் தெரியவில்லை?

மங்களவல்லி:—மாமி, தாங்கள் காலாலிட்ட வேலையைக் கையாற் செய்துகொண்டு வருகிறேனே. நான் இவ்விடம் வந்ததே அதற்குத்தானே. இனி வெகு ஜாக்கிரதையாயிருந்து செய்து வருகிறேன்.

மாமி:—அடி மங்கீ, என்னடி அதிகாரமாய்ப் பேசுகிறாய்? அவ்வளவில் உன் வாயை மூடு. இங்கே வா. இதென்ன இப்படி இங்கே உப்பு சிந்தியிருக்கிறது? "உப்பைச் சிந்தினையோ துப்பைச் சிந்தினையோ" என்கிறார்களே. இதோ இப்படித் தண்ணீரைச் சிந்தலாமா? "நீரைச் சிந்தினையோ உன் சீரைச் சிந்தினையோ" என்று கேட்டதில்லையா? இப்படித்தானா குடித்தனம் செய்கிறது? ஐயோ! இதென்ன கண்டா கொண்டிக் குடித்தனமாயிருக்கிறதே. அதோ பார் உரலண்டை அரிசி சிந்தியிருக்கிறது. எந்தச் சிறுக்கி இப்படிக் குடித்தனம் உனக்குக் கற்றுக்கொடுத்தவள்? அவளை உதை கொடுப்பேனே? ஓங்கிப் புடைப்பேனே. அவளை இப்போது கண்டால் அடிப்பேன் துடைப்பைக் கட்டையாலே. இந்த அநீதம் ஆருக்கு அடுக்கும்? என் பண்டத்தைப் பாழாக்கவா நீ வந்தாய்? அடி பழிகாரி, உன்னைப் பாப்பாச்சியால் பழக்கப்படைத்தால் என்ன? உன்னை

---

நம்மை ஒரு முறை சந்தித்ததோடு திருப்திபட்டுப் போகிறவர்களிடம் மறுபடி நாம் போகக் கூடாது. மீறிச்செல்லின் அங்கு மரியாதை கெடும்.

யும் ஒரு பெண்ணுகப் பெற்ருனே வீட்டைக் கெடுக்க.

மங்களவல்லி:—ஐயோ! மாமி, தங்கள் குமாரர் சின்னவர் சாப்பிடுகையில் உப்பையும், கை கழுவுகையில் ஜலத்தையும் சிந்திவிட்டார். வேலைக்காரி உரலில் போட்டபோது அரிசி கொஞ்சம் சிந்திவிட்டது. என் மீது தான் தப்பிதம்; என்னைத் திட்டுங்கள். ஒருதவறும் செய்யாத என் பெற்ருரை வைவது தர்மமாகாது.

மாமி:—என்னடி, மகிமையைக் கொட்டிக் கொட்டி வாயில் வந்தபடி பினத்துகிருய்? சும்மா மினுக்காதே. காமாட்டிக் கழுதையே, தூ! போக்கிடங்கெட்ட சிறிக்கியே, நீயா எனக்குப் புத்திசொல்லப் புறப்பட்டாய்? "நீயோ கண்டறிந்த நாயுமல்ல, கனமறிந்த கப்பலுமல்ல." உனக்கென்ன தெரியுமென்று இப்படிக் குலுக்கித் தசுக்கிப் பேசவந்தை? என்னமோ கடினத் தொண்டையைக் காட்டிக் கடை பரப்பத் தொடங்கினுய்? இது வரையிலு மில்லாமல் இப்போது இப்படி நீ தைரியமாய்த் தத்திக்குத்திப் பேசக் கற்றுக்கொடுத்த கடைகெட்ட பயல் எவன் அடீ? "அவனைக் கொடுப்பேனே ஆக்கிப் படைப்பேனே." அவன் வாயிலே மண்ணைவெட்டி அடிக்க. எதடீ வரவரக் கெட்டுப்போனுய்? "தடிக்கு மிஞ்சின மிடாவாக" மெத்தச் சவுக்கம் தீர்த்துப் பேசுகிருய்? உன்னைப் பெற்றவனென்ன மூன்றுகொம்பு முளைத்தவனோ? அவனைச் சொன்னுல் என்ன ஆக்கினை வந்துவிடும்? அவனும் கெட்டான், நீயுங்கூடக் கெட்டாய். அவனையும் உன்னையும் அடிப்பேன் பழஞ்செருப்பாலே. பத்திரமாயிரு. பல்லு உதிர்ந்து விடும். ஓகோ!

மங்களவல்லி:—ஐயோ! மாமி, இப்படியும் பேசலாமா? இது தெய்வத்துக்கடுக்குமா? இப்போது அவர்கள் இவ்விடமிருந்து கேட்டால் எவ்வளவு அனர்த்தம் நேர்ந்துவிடும்? உங்களிடத்தில் ஒரு பெண்ணைக்கொடுத்து இப்படியாகப் பேய்ப்பாட்டுக் கேட்க அவர்கட்கு வந்த விதி யென்ன?

மாமி:—அடி, என்ன சொன்னுய்? இன்னெருதரம்சொல்லு, பார்ப்போம் பழஞ் செருப்பாலே பல்லுதிர அடிக்கிறேன். "என்ன ராங்கி மிஞ்சி ளும் தேடுகிறை?" உன்னைப் பெற்ற பயலும் சிறிக்கியும் கண்டால் என்ன? "என் வீட்டுக் குதிரை மூளையைப் பிடுங்கிடுவார்களோ?" ஒரு காசு நகை நட்டுப் போட விதியற்ற நாய்களுக்கு ஒத்துப்பேச வந்தையோ? சும்மா என் பூச்சி காட்டுகிறை? ஆகட்டும் இதையெல்லாம் அறிவேனடீ. சீ! சீ! போடீ. எதிரே நில்லாதே.

ஃ

இவ்விதம் எவ்வளவோ கொடுமைப் படுத்தியும், தூணில் கட்டி வைத்து, கேசங்களை அவிழ்த்து அதையும் தூணில் கட்டிவிட்டு அடித்தும், அலங்கோலம் செய்து, நான்குமாத கர்ப்பமாயிருந்த மங்களவல்லியை ஆற்றில் தள்ளிவிடுகிருர்கள். அதன்பின் தப்பிக் கரை ஏறிக் காட்டில் தங்கியிருந்து ஆண்குழந்தையைப் பெற்று ஏகாங்கியாயுள்ள நாளில், அவ்வழியே வந்த தன் கணவனைக் காண்கிருள். இறந்தாளென்று ஏங்கி நின்ற அவர் தமது பிராணகாந்தையைக் கண்டு பிரமிக்கிருர். மங்களவல்லி அவர் பாதத்தில் விழுந்து புலம்புகிருள்:—

---

நான் எனது வாழ்நாளில் அவ்வளவு அன்புள்ளோரைப் பார்க்கவில்லை என்கிருர் ஒருவர்.

ஐயையோ நானென்ன
செய்குவனே
யினியாரை நானேவேனே
யம்புவியில்
தெய்வமென்னை யிந்தவாறு
செய்தா லென்ன
செப்புவனே என்றன்
மன்னவரே.

வீட்டிலே நான்பட்ட
பாட்டை யெல்லாம்
சொல்ல மாட்டுவனே
யாருமிலாத
காட்டிலே நான்பட்ட
பாட்டை யெல்லாம்
அந்தக்கர்த்த னறிவானே
மன்னவரே.

ஆற்று நீரொடுக்க
நாத்தியழைக்க நானந்தி
நேரத்திலே
வந்தேனே
ஆற்று நீர்மொள்ள
குனிந்தே னென்னைத்
தள்ளி யாரோ
மறைந்தாரே மன்னவரே.

ஆற்றில் விழுந்தே
யலறினே னென்றன்
நாத்தி கை தராமல்
போயினளே
ஆற்றில் அமிழ்ந்திறவாமல்
மிதந்திந்த
ஆரண்யம் சேர்ந்தேனே
மன்னவரே.

தெய்வ சகாயத்தினாலே
மரவேரை சிக்கப்
பிடித்துக் கரையேறி
எய்தினேன்
இந்தப்பாழ் மண்டப
வீட்டிலே
யென்ன செய்வே
னென்றன் மன்னவரே.

ஃ

தன் மனைவி தன் தாயாராலும், தன் தங்கையாலும் பட்ட பாடுகள் யாவற்றையும் கேட்டு அவளோடு இல்லம் சேர்கிறான். எல்லாக் கொடுமைகளும் அடங்குகின்றன. மங்களவல்லி தன் குழந்தையுடனும் இனிய கணவனோடும் சுகமே வாழ்கின்றாள்.

---

☞ இது ''மங்களவல்லி விலாசம்'' என்ற நாடகத்தினின்றும் சுருக்கி ஒரு பகுதி எடுக்கப்பெற்றது. இது 250-பக்கங்களுள்ள விஸ்தாரமான நூல். 1884-ம் வருஷத்தில் பெங்களூர் சென்றல் காலேஜ் தமிழ்ப் பண்டிதர் தி. கோ. நாராயணசாமிபிள்ளை அவர்கள் இயற்றியது. பழங்காலத்துப் பிரசித்த ஆசிரியர்களுள் இவரும் ஒருவராவர். இவர் (1) மாமி மருகியர் வாழ்க்கை, (2) விநோத சரித்திரம், (3) விவேக சரித்திரம், (4) அரங்க மலங்காரமாலை (அணிநூல்) (5) சித்திரம் காட்டிச் சத்தியம் நிறுத்தியகதை முதலியவற்றை இயற்றியுள்ளார். இவரது தந்தையாரான திரிசிரபுரம் கோவிந்த பிள்ளை யவர்கள் மஹாவித்வஜ் ஜநசேகராக விளங்கி தமிழ்ப்புலமை நடாத்தினர். எத்தனையோ ஆசிரியர்களும் பண்டித மணிகளும் ஜனங்களின் ஞாபகத்திலிருந்து மறைந்துபோயினர். அவர்களின் நூல்களும் கிடைப்பதில்லை. இந்த மங்களவல்லி விலாஸமும் இப்போது அகப்படவில்லை.

---

வேலையாள் விசுவாசமற்றுக் கெடுவது நன்றியற்றதன்மையாலு மாகலாம், அல்லது, ஏற்கெனவே எஜமானனிடத்துள்ள பழம்பெருச்சாளிகளுடன் கூடிக்கொண்டதாலும், எஜமானனாலுமாகலாம். காரணமின்றி எதுவும் நிகழா.

# புது மனிதனின் புதுமைகள்



நான் சிங்கப்பூரிலிருந்தும் வந்து நான்கு நாட்கள் தானுயிற்று. வெளிநாட்டில் சுற்றித் திரிந்து பட்ட அவஸ்தைகளுக்காக இளைப்பாறிக் கொண்டிருந்தேன். வீட்டில் செலவுக்கு நிர்ப்பந்தமாயும், ஊரில் எங்கும் கடன் மயமாகவும் ஆகிவிட்டால் வெளி நாடொன்றுக்குப் புறப்பட்டு விடுவது என் நெடுங் கால வழக்கம். பிறகு பணத்துடன் வந்து எல்லாக் கடன்களையும் தீர்த்து விடுவேன். இதனுல் என் நாணயத்தில் எவருக்கும் மதிப்புண்டு. நான் சப்பல் ஏறுவதற்குக்கூட எனக்குக் கடன் கொடுத்தவர்களே மறுபடியும் கடன் தந்து அனுப்புவார்கள். கடைசியாக நான் புறப்பட்டபோது என் ஒரே குமார்த்தி சாந்தபாய் அப்போதுதான் புஷ்பவதி யானுள். அதற்கான விசேஷங்களையும் கடன் வாங்கி நடத்தி விட்டு, அந்த வைபவத்தையும் கண் குளிரப் பார்த்துவிட்டு, இனி ஒரு நிமிஷமும் ஊரில் இருக்க யோக்கியதை யில்லை யென்று அந்த வாரத்திலேயே சிங்கப்பூருக்குப் புறப்பட்டு விட்டேன். போய் நான்கு வருஷங்களாகியும் ஊருக்குத் திரும்பவில்லை. ஐந்தாவது வருஷமும் பிறந்தது. அன்று காலை என் மனைவியிடமிருந்து வந்த கடிதத்தில் குமார்த்தி சாந்தபாய்க்கு இரங்கூனில் மாண்டலேயில் ரத்தின வியாபாரியா யிருந்துவரும் ஒருவர் மணமகனுகக் கிடைத் திருப்பதாயும் பெண்ணின் பெயருக்குப் பதினுயிரம் ரூபாய் எழுதி வைத்து இரண்டாயிரம் ரூபாய்க்கு நகை போடுவதாகவும் சொல்கிருர்க ளென்றும், அதற்கு என்னுடைய அபிப்பிராயத்தை எதிர்பார்ப்பதாயும், மாப்பிள்ளை தங்கமான குண மென்றும் எழுதியிருந்தாள்.

என் மனதிற்கு இது திருப்தியா யிருந்தது. ஆனுல், ரங்கூனுக்குப் பெண்ணை யனுப்பாமல், மாப்பிள்ளை வீட்டினர் இந்தப் பக்கமே வந்து விடப்பார்த்தால் நலமாயிருக்கு மென்றும் பதில் எழுதினேன். அதற்கும் அவர்கள் ஒப்புக் கொண்டதாயும் கும்பகோணத்திற்கு வந்து விடுவதாகவும், வந்த பிறகு பெண்ணை யனுப்பலாமென்று சொன்னதாகவும், ரூபாய் பதினுயிரம் கொடுத்து சாந்தபாயின் பேருக்கு வாங்கிய போஸ்டல் காஸ் ஸர்டிபிகேட்டுகளையும் இத்துடன் அனுப்பியிருப்பதாகவும் என் மனைவி எழுதி யிருந்தாள். யாவற்றையும் பார்த்துவிட்டு, உன் பிரியப்படி விவாகத்தை முடிக்கவும் என்றுபதில் எழுதி ஐந்நூறு ரூபாய்க்கு ஒரு செக்கும் அனுப்பினேன். விவாகம் நடந்து ஒரு வருஷத்திற்குப் பின் தான் இப்போது என் சொந்த ஊரான திரிச்சிக்குத் திரும்பினேன். கும்பகோணத்திலிருக்கும் புத்திரியை இன்னும் நான் பார்க்கப் போகவில்லை. ஆயினும், மாப்பிள்ளைக்கு மட்டும் நான் வந்திருப்பதாகவும், விரைவில் வருவதாகவும் ஒரு கடிதம் எழுதினேன்.

ஒரு நாட் காலையில் என் மனைவி நாலாவது வீட்டுக் கிணற்றில் ஸ்நானம் செய்யச் சென்றிருந்தாள். நன்ருக உடுத்தியிருந்த ஒருவர் என்னிடம் வந்து என் மனைவி எங்கே என்ருர். உடனே நான்,—"நீர் யார் அவளை விசாரிப்பதற்கு?" என்றேன்.

—"பெரிய அதிகாரமாயிருக்கிறதே. நான் ஆசை வைத்தவளைக் கேட்டால் தங்களுக்கு என் முகம் சிவந்து கோபம் உண்டாகிறது?"

"என் மனைவி மீதா உமக்கு ஆசை? நான் அவள் கணவன் என்று தெரிந்தே தான் இப்படி வார்த்தையாடுகிறீரா?"

"பலே கோபம்! அது கிடக்கட்டும். தங்கள் குமார்த்தி விவாகம் நடந்த வீட்டை விட்டுப்போய் விட்டாளே. அது தங்கட்குத் தெரியுமா?"

"என் குமார்த்தி சாந்தபாயா அப்படிநடந்தாள்? உமக்கு யார் சொன்னது?"

"ஊரே தெரியுமே. அவள் என்னைக் காதலிக்கிறாள். தற்சமயம் என்னிடம் தான் இருக்கிறாள். உமது மனைவியும் என்னை விரும்புகிறாள்."

"நீர் ஓர் போக்கிரியா? அல்லது உமக்குப் பைத்தியமா? ஜாக்கிரதை!"

"ஜாக்கிரதையாகவா இருக்க வேண்டும்! பேஷ்!! அது போகட்டும். தங்கள் மனைவி எங்கே? சீக்கிரம் சொல்லுங்கள். எங்களுக்குள் கொஞ்சம் ரகசியம் உண்டு."

"சீ! சீ! நாயே! வெளியே ஓடு, போலீஸில் ஒப்புவிப்பேன். போகிறாயா? இல்லையா?"

"நானா போகிறது? ஒரு போதுமில்லை. உங்கள் மனைவியைக் காட்டி விட்டால் அழைத்துக்கொண்டு உடனே போய் விடுகிறேன்."

எனக்கு அவமானம் பொறுக்க முடியவில்லை, உடனே அவனை அறைவதற்கு எழுந்தேன். அதே நிமிஷம் என் மனைவி வந்தாள். என்னுடன் பேசியவன் அவளைக் கண்டு ஆநந்த மடைந்தான். எனக்கு ஆத்திரம் தாங்கக் கூடவில்லை. "யாரடி இவன்?" என்று என் மனைவி மீது பாய்ந்தேன். அவள் சிரித்துக் கொண்டே, இவன் தான் உங்கள் விவாகத்துக்கு முந்தி எங்கோ ஓடி விட்ட என் ஒரே தம்பி. கடைசியில் ரங்கூனிலிருந்து பெரிய பணக்காரனாய் இங்கு திரும்பி வந்தான். இவன் தான் சாந்தபாயின் கணவன்" என்றாள். ஃ

உடனே திகைத்து நின்றேன். என்னை வேண்டுமென்றே பரிகாஸம் செய்வதற்காகக் குறிப்பாய் நான் இன்னாரென்று தெரிந்து கொண்டு அவன் பேசியதாக உணர்ந்து அவனைப் பூரிப்புடன் தழுவிக்கொண்டேன். பிறகு அவனைப் பார்த்து,

"அப்பா, மாப்பிள்ளையே, என் குமார்த்தி விவாகம் நடந்த வீட்டை விட்டுப் போய்விட்டதாகச் சொன்னாயே, அதற்கென்ன பொருள்?" என்றேன்.

"மாமா, இது தெரியாதா? விவாகத்தை வேறு வீட்டில் தான் நடத்துவது சாதாரணம். விவாகம் ஆனதும் விவாகம் நடந்த வீட்டை விட்டு எல்லோருமே தான் புறப்பட்டு விடுகிறார்கள். பிறகு தங்கள் சொந்த வீடு சேருகிறார்கள்" என்று கூறிச் சிரித்தான். ஃ

இதுவரையில் மாடி மீது ஏறி மறைந்து நின்று எங்கள் ஸம்பாஷணையைக் கேட்டிருந்த என் குமார்த்தி கீழ் இறங்கி என்னிடம் வந்து நமஸ்கரித்தாள். ஆவலுடன் எடுத்து அணைத்துக்கொண்டு, உன்னை மாப்பிள்ளை மாடியில் ஒளிந்து கொண்டிருக்கும்படி சொல்லிவிட்டு இங்கு என்னிடம்வந்தானா என்றேன். 'ஆம், தங்கள் கடிதம் கண்டதும் புறப்பட்டோம்' என்றாள். பிறகு அன்றைய பொழுது எனக்கு இன்ப விருந்தாக முடிந்ததைக் குறித்து நான் சொல்லவும் வேண்டுமோ?

# எனது பட்டணவாசம்.



நான் கலாசாலையை விட்டு மாலையில் என் வீட்டிற்கு வந்தபோது திண்ணையில் குங்குமப் பொட்டுடன் ஒரு கிழவன் உட்கார்ந்திருப்பதைக் கண்டேன். அவன் என்னை எவ்வூர் என்றும், பெற்றோர்களுக்கு என்ன வேலையென்றும் விசாரித்தான். எனக்கு அவன் நடவடிக்கைகள் பிடிக்கவில்லையாயினும், வெளியூரில் எவரையும் விரோதித்துக் கொள்ளக் கூடாதென்று என் சங்கதிகளைச் சுருக்கமாய்க் கூறினேன்.

அவன்:—என் சார், இந்த மாதத்தில் தான் இங்கு குடிவந்தீர்களா? வாடகை என்ன?

நான்:—இந்த வீட்டில் எனக்கு ஒரே அறைதான். அதற்கு வாடகை ஐந்து ரூபாய்.

அவன்:—நாங்கள் இருக்கும் வீட்டை வந்து பாருங்கள். நான்கே ரூபாய்தான் வாடகை. தாங்கள் இரண்டே ரூபாயில் ஒரு அறை எடுத்துக்கொண்டு, வீடு முழுதும் நீங்களே வழங்கிக்கொள்ளலாம். ஹோட்டலுக்கு எவ்வளவு கொடுக்கிறீர்கள்? சமைக்க ஒரு ஆள் இருந்தால் எவ்வளவோ நல்லதாயிற்றே.

நான்:—இப்பொழுதே 25-ரூபாய் மாதம் செலவாகிறது. இனி ஒரு ஆளை வைத்தால் இன்னும் அதிகமாகுமே?

அவன்:—நானும் என் பேத்தியும் 15-ரூபாயில் அடக்கிவிடுகிறோமே. சமைக்க ஆள் இருந்தால் புசிப்புச் செலவு குறைந்து விடும். ஹோட்டலுக்குக் கொடுத்துக் கட்டுமா? அது பெரும் பூதமாயிற்றே.

ஃ

இந்த சமயம் "தாத்தா" என்று கூப்பிட்டுக்கொண்டே 16-வயதுள்ள பரம சுந்தரி யொருத்தி "காப்பி சாப்பிட வா தாத்தா" என்று அவரை அழைத்தாள். என்னையும் கொஞ்சம் புன்னகையுடன் நோக்கினாள். என் கண்களும் அவளைக் கவனித்தன. "பேசிக் கொண்டிருக்கிறேன், வருகிறேன் போ அம்மா" என்று அவர் கூற, அந்நங்கையும் "சீக்கிரம் வா தாத்தா, காபி ஆறிப் போகும்" என்று சொல்லிவிட்டுச் சென்றாள். நான் அவள் நடந்து செல்லும் அழகைக் கவனித்து மயங்கி நின்றேன்.

தாத்தா:—நமது வீட்டைப் பார்க்க வருகிறீர்களா? இங்கு வந்தவள் என் பேத்திதான். அவளும் நானும்தான் வீட்டில் இருக்கிறோம். அவள் கணவன் இரங்கூனுக்குப் போயிருக்கிறான். நீங்களும் எங்கள் வீட்டிற்கே குடி வந்துவிட்டால் அதிக துணையாயிருக்கும். வீடும் நிறைந்திருக்கும்.

ஃ

சரியென்று அவனோடு புறப்பட்டேன். வழியில் கிழவன், சார், காலணா உங்கள்ஜோபியிலிருந்தால்கொடுங்கள், பொடி வாங்கிக் கொள்கிறேன், வீட்டுக்குப் போய்க் கொடுத்து விடுகிறேன் என்றான். என்னிடம் சில்லரையில்லாததால் ஒருஅணா தர, அதற்கு காலணா

---

ஒத்து வாழாக்குடி விடியுமா? பக்கத்துவீட்டின் மதிப்புக் குறைவும், தெரு சிரிப்பதுமே லாபம். பரஸ்பரம் கணவனும் கணவியும் அன்பாக நடந்து கொண்டால்—அதுதான் அவர்களுக்கு இவ்வுலகில் பெரிய ஆஸ்தி.

பொடி, காலணு வெற்றிலைப் பாக்கு, காலணு புகையிலை வாங்கிக் கொண்டு காலணாவை என்னிடம் தந்து, வீட்டிற்குப்போனதும் கொடுப்பதாய்ச் சொன்னான். அதற்கென்ன வென்று சொல்லிவிட்டு அவன் வீட்டிற்குச் செல்ல, கிழவன் கதவைத் தட்டிய பிறகு முன் சொன்ன நங்கை கதவைத் திறந்து என்னைக் கண்டதும் நாணி உட்சென்றாள். அவள் சிரிப்பு என் மனத்தைக் கவர்ந்தது. நான் அவளைக் கடைக்கணித்துக் கொண்டே உட்சென்றேன்.

கிழவன்:—பாப்பா! இவரும் இனி நம் வீட்டிலேயே இருந்து கொள்வார். வீட்டில் முக்கால் பாகம் அவருடையது. இப்போது எனக்கும் மாமாவுக்கும் காப்பி கொண்டு வா.

ஃ

உடனே காபியை அந்த யுவதி எனக்கும் கிழவனுக்கும் கொடுத்தாள். எனக்குப் பிடிக்காவிடினும், நங்கையின் பிரியத்தையடைய வேண்டிக் காபியைப் பருகினேன். கிழவன் தான் மலபாதைக்குப் போய் வருவதாக வெளியிற் சென்றான். நங்கை வெற்றிலைத் தட்டை என்னருகே வைத்துப் போட்டுக் கொள்ளுங்கள் என்றாள். நான் வழக்கமில்லை என்றேன். "எல்லாம் நான் கற்றுக் கொடுக்கிறேன்" என்று சிரிப்புடன் கூறிப் பாக்கை என் வாயிற் போட்டாள். பிறகு தாம்பூலமும் மடித்துத் தந்தாள். என்னை மிகமிக நெருங்கிவந்து என் மீது சாய்ந்து கொண்டாள். நானோ 18-வயதுடைய பால்யன். எழாம் வகுப்பு வாசிப்பவன். பெரியோர்களின் பாதுகாப்பில் தற்சமயம் இல்லாதவன். செலவுக்கு வேண்டிய பணம் கிடைக்கும் ஸ்திதியில் உள்ளவன். எவரும் இல்லாத சமயத்தில் ஓர் இளம் நங்கை என்னுடன் தனித்துப் புன்முறுவலுடன் பேசினால் என் மனம் எவ்வாறிருக்கும்? நான் வெற்றிலை போடுவது கெட்ட வழக்கம் என்றேன். அதற்கு அவள் "எல்லாம்" கெட்ட வழக்கங்கள் . தான்; பழகாமலிருக்கமுடிகிறதா? என்று புன்னகையுடன் மொழிந்தாள். நான் என்னையும் மீறி அவளுக்கு ஒரு முத்தம் தரச் சென்றேன். இச்சமயத்தில் கதவு தட்டப்படவே, இந்தப் பாழுங் கிழவன் இப்போது தானா வரவேண்டும் என்று கிழவனைச் சபித்தேன். ஆனால், வேறொருவன் வந்து, என்னைப் பார்த்து, 'ஐயா, கிழவனார் வெளியில் மலபாதைக்கிருந்து விட்டாரென்று போலீஸ்காரன் பிடித்துக் கொண்டான். உங்களைக் கேட்டு ஐந்து ரூபாய் வாங்கிவரச் சொன்னார்' என்றான். நான் நங்கையின் முகத்தைப் பார்த்தேன். அவள் 'நீங்கள் கொடுங்கள், தாத்தா வந்து பெட்டியைத் திறந்து தருவார்' என்றாள். அவ்விதமே ஐந்து ரூபாய் நோட்டு ஒன்றைக் கொடுத்தனுப்பினேன். நங்கையும் வெளிக் கதவை மூடிவிட்டு என்னிடம் சிரிப்புடனே வந்தாள். நானும் வெளிவார்த்தையாகப் போய் வருவதாகச் சொல்லி எழுந்தேன்.

நங்கை:—இவ்வளவு பெரிய வீட்டில் நான் தனித்து எப்படி இருப்பேன்? நீங்களும் இரவுக்கு என்னோடு துணையாக இருங்கள். தாத்தாவையும் காணோம்.

நான்:—என்னை இருக்கும்படி சொல்லிய வார்த்தைக்கு என்ன பரிசு கொடுப்பதோ?

நங்கை:—நான் தங்களையே பரிசாக எடுத்துக் கொள்கிறேனே.

நான்:—இந்தா என் முத்தத்தைப் பெற்றுக் கொள்ளு என்று நெருங்கி முத்தமிட்டேன்.

---

உணர்ச்சியின் அலைகளால் எழுப்பப்படும் இன்பங்களும் துன்பங்களும் அளவிடப்போமோ! சொந்தமாக அனுபவித்தவரே அதனை அறிவார்.

இனி, கதையை வளர்ப்பானேன்? இரவு பொழுது மிக்க மனோரம்மியமாகக் கழிந்தது. அங்கேயே தங்கி விட்டேன். ஆகும் செலவைச் சரிபாதியாகப் பகிர்ந்து கொள்வதென்று கிழவனார் ஏற்பாடு செய்தார். வீட்டுக்கு வேண்டிய சாமான்களுக்குக் கிழவரிடம் பணம் கொடுத்துவரும்படி எங்கள் வரவு செலவுச் செட்டியாருக்குச் சீட்டு கொடுத்தனுப்பிவிட்டேன். இந்த விதமாகவே காபி, பொடி, பீடி, புகையிலை, சினிமா, நாடகம் எல்லாவற்றிலும் பழகிப் பெரிய மனிதனாகத் தேர்ந்து விட்டேன். பாப்பாவுக்குத் தம்பிகள் (?) அண்ணன்கள் (?) என்று பலர் வந்து புசித்துவிட்டுச் செல்வார்கள். எல்லாருக்கும் என் செலவிலேயே சகலமும் நடந்தன. கிழவரும் வீட்டுடனேயே இருந்து வந்தார். பகலிலன்றி இரவில் எவரும் வீட்டில் இரார். நானும் பாப்பாவுமாக இருவர் மட்டுமே இருப்போம். இந்தப் பாக்கியம் கிடைப்பது என்ன இலேசா?

ஃ

தீபாவளிப் பண்டிகைக்காக என்னை ஊருக்கு வரும்படி எனது தந்தையார் கடிதம் எழுதி இருந்தார். எனக்குப் போகப் பிரியமில்லை. ஆயினும், வேறு விதமாக நினைப்பார்களென்று போயிருந்தேன். என்னைப் பார்க்கஎன் நண்பர்கள் பலர் வந்திருந்தனர். பலரும் என்னை இளைத்துவிட்டேனென்றும், கெட்ட வழக்கங்கள் பழகி இருக்கிறேனென்றும் பேசிக்கொண்டார்கள். எனது தாயார் இந்தத் தண்ணிக்கு அந்தத் தண்ணி பிடிக்கவில்லை யென்றும், தாய் தந்தையர்களை விட்டிருப்பதால் இளைத்தேனென்றும் சமாதானங் கூறினாள்.

ஃ

மாலை எனது தந்தையார் வீட்டிற்கு வரும்பொழுது எங்கள் வரவு செலவுச் செட்டியாரான ரத்னம்செட்டியாரும் வந்திருந்தார். எனது தகப்பனார் என்னைக் கண்டவுடன் மூன்று மாத காலத்துக்குள் நீ எப்படி ரூபா 500-செலவு செய்தாய் என்றார். எனது தாயார் என் பக்ஷமாக வாதிட்டாள்.

ஃ

நாட்கள் மூன்று கழிந்தன. நான் பாடசாலைக்குப் போகவேண்டுமென்றேன். எனது தாயார் உடம்பு இளைத்திருப்பதால் தக்க மருந்து சாப்பிட வேண்டுமென்று வைத்தியரை வருவித்தாள். வைத்தியர் கை பார்த்துவிட்டு மேக நீர் இருக்கிறதென்றும் ஊசி போட வேண்டுமென்றும் சொன்னார். ஃ

எனது தந்தை என் மீது மிக்க கோபங் கொண்டார். பையன் படிக்கப் போய் அனேக விஷயங்கள் கற்றுக்கொண்டான். படித்தது போதும் என்று சொல்லிவிட்டு வைத்தியசாலைக்கு அனுப்பினார்.

ஃ

நான் இப்பொழுது மஞ்சத்தின் மீது படுத்துக்கொண்டு டாக்டரின் சிகிச்சையில் இருக்கிறேன். இப்படி இருந்தாலும் (பட்டணத்தில் படித்துக் கொண்ட) பாப்பாளின் ஞாபகம், வெற்றிலைப்பாக்கு ஞாபகம், சூடான காபியின் ஞாபகம், வாசனைப் புகையிலையின் ஞாபகம், பொடியின் ஞாபகம்—அடிக்கடி உண்டாகிறது. என் தகப்பனார் என்னைப் பார்க்க வரும்போதெல்லாம் பட்டண வாசம் உன்னைப் பாழ்படுத்தி மேகவெட்டைக்கு ஆளாக்கி விட்டது என்று சொல்லிக் கொள்ளுகிறார்.

கோவை—S. V. R.

[விஷயம் சுருக்கிப் பிரசுரிக்கப் பட்டது. மூன்று, நான்கு பக்கங்களுக்கு மேற்போகாமல் அடங்கும்படியிருக்கவேண்டும். ப-ர்.]




மொட்டைச்சுப்பி:—எங்கேயடி உன் நகைகள் ஒன்றும் காணோம். வெறுங்கையாக இருக்கிருயே?

ராங்கி ரங்கு:—நீ வெறுமையாக நின்றதைப் பார்த்து நானும் அதுவும் ஒரு புது மோஸ்தராக்குமென்று என் நகைகளைக் கழற்றிவிட்டேன்.

மொட்டைச்சுப்பி:—தீபாவளி செலவுக்கு என் நகையில் கை வைக்கக்கூடாதென்று வீட்டுக்காருடன் கோபித்து நகைகளைக் கழற்றிப் பத்திரப்படுத்தப்போக, அது உனக்கு ஒரு புது மோஸ்தராகவா தோணுகிறது? போடீ வித்தைக்கள்ளி. உன் வீட்டுச் சண்டைகள் தெரியாதா? உன் கணவனே உன் நகைகளைக் கழற்றிக் கொண்டானென்று எல்லோருக்கும் சொல்வதற்காக நீயே கழற்றிவைத்திருப்பதும் தெரியும்? என்னிடமா உன் வித்தை?

ஃ

மூக்காயி:—உன் வீட்டுக்காருக்கு எவ்வளவு கடன் இருக்கும்? எங்கே எவ்வளவு பணம் போட்டிருக்கிருரு?

விழித்த ஆயி:—என்டியம்மா, உனக்கு அந்த சங்கதி? உன் வீட்டுக்காரர் மெதுவாக என்னிடம் நோண்டி இதையெல்லாம் கேட்டறியும்படி உனக்குச் சொன்ஞரா?

ஃ

பையன்:—அக்கா என்னைக் கழுதை என்று சொன்ஞள் (என அழுதான்.)

தந்தை:—நீ கழுதையல்ல, கண்ணாடியில் பார்—நீ சரியான மனிதன். உன்னுடைய மூட அக்கா பொய் சொல்லுகிருள். இதற்கா அழுகிறது?

ஃ

சேஷி:—என்னடி, இலை கேட்டால் இல்லையென்கிருயே? இன்றைக்கு அமாவாசை ஆச்சுதே! இலையில்லாமற் போகுமா?

ரங்கு:—நானும் குழந்தைகளும் சமைத்துண்ணமட்டும் காய்கறி வாங்கி வந்தார். அவர் இங்கு உண்ணுததால் இலை வாங்கிவரவில்லை. எங்கேயோ புசிக்கிருரு. சண்டை.

சேஷி:-எங்கே புசித்தாலென்னடி? "இன்னெண்ணுக்கு" உன் கிட்ட தாண்டி வரணும், கெஞ்சணும், அப்போது உன் பிகுவைக் காட்டடி.

ஃ

மனைவி:—எனக்குத்தான் ஒரு சேலை வாங்கினீர்கள். மறுபடி யாருக்காக இன்னெரு சேலையெடுத்தீர்கள்?

கணவன்:—கொஞ்சம் கோவணத்திற்குத் துணி கேட்டால் மூக்கால் அழுகிருய். அதற்காக ஒரு சேலையையே வாங்கிவிட நினைக்கிறேன்.

ஃ

அவர்:—நான் இரவல் பொடிக்குத் தங்கள் டப்பியை எடுத்தால் தடுத்துப் பேசாமல் இருக்கிறீர்களே?

இவர்:—தாசி தன் மகளுடன் ஒருவன் பேச நெருங்கினல் தடுப்பாளா? 'பழகட்டும்' என்று அவள் விடுவது போலவே, நானும் பொடி டப்பியை உங்களிடம் விட்டேன். நீங்களும் பழகிவிட்டால் நான் உங்களிடம் பிறகு இரவல் பொடி வாங்கலாமல்லவா?

ஃ

துப்பு:—இன்று வேதாந்தகேசரி நாணு சாஸ்திரி மதுபானப் பிரசங்கம் செய்யப்போகிறார். வருகிறாயா?

கிட்டு:—சாஸ்திரிகள் பிரஸங்கமா?- பேஷ்! அவர் உபன்னியசிக்கும் ஒவ்வொரு விஷயங்களிலும் சொந்தமாகவே மிக்க அனுபவமுடையவராயிற்றே! ஃ

பயில்வான்:—செட்டியாரே! என்னுடன் குஸ்திபோட வருகிறீரா?

செட்டியார்:—நான் தினமும் என் மனைவியோடு குஸ்தி போடுகிறதே போதும். அதில் உடம்புமட்டுமல்ல; நெஞ்சுகூடப் புண்ணாயிருக்கு.

ஃ

நண்பர்:—ஏது அந்த ஆளை வந்ததும் உடனே ஆபீஸில் வேலைக்கு அமர்த்திவிட்டீர்கள்?

உத்தியோகஸ்தர்:—அவன் நமது வீட்டிலும் நல்ல வேலை செய்வானென்று தெரிந்தது. ஆனதால் கை கடிக்காமலிருக்க ஆபீஸ் சம்பளத்திலேயே ஏற்பாடு செய்துவிட்டேன்.

ஃ

தந்தை:—ஏனப்பா! அப்போதே வரக்கூடாதா? பலகாரமெல்லாம் ஆய்விட்டதே.

குமாரன்:—அம்மா எனக்கென்று எடுத்து வைக்காமல் போகுமா? அது உங்களுக்குத் தெரியாது அப்பா.

ஃ

மன்னரு:—நீங்கள் வந்து வெகு நேரமாயிற்றே? சாப்பிட ஹோட்டலுக்குப் போனேன். வீட்டில் 'அவளோடு' சண்டை.

தங்கமுத்து:—நான் என் வீட்டுச் சண்டையைச் சொல்வதற்கல்லவா உன்னிடம் வந்தேன். இங்கும் சண்டையா? வீட்டுக்கு வீடு மண்ணடுப்புத்தான் போலிருக்கே?

ஃ

தேசபக்தர்:—தேச விஷயத்தில் துணிந்தவனுக்குத்தான் வாழ்வு.

லீலா விநோதர்:—ஆம், துணிந்து பார்த்தே தான் இரண்டிலொன்று தெரியவேண்டும். ஒரு சமயம் நங்கை இணங்கி விடுவதுமுண்டு. அல்லது துடைப்பைக்கட்டை பூசையுமுண்டு.

ஃ

நண்பர்:—நான் கொடுத்த முறுக்கு பணியாரம் எப்படி யிருந்தது?

அன்பர்:—எதுவும் இனமாக வந்தால் நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால், கொடுக்கிற புத்திதான் வெகு பேருக்கில்லை. ஃ

வினா:—எதிலே அதிகப் பிரியம்?

விடை:—எதை வெறுக்கும்படி சாஸ்திரங்கள் வற்புறுத்துகின்றனவோ 'அதில்' தான் அதிகப் பிரியம்-சிரத்தை. ஃ

அவன்:—என் கண்ணே! நான் சும்மா தொந்தரை செய்வதாகக் கோபிக்கிறாயே. உன்மேலுள்ள ஆசையாலல்லவோ உன் அருகிலேயேயிருந்து அத்தனை முத்தங்களிடுகிறேன்.

தாசி:—நான் பொதுமகள். நீங்கள் சீக்கிரம் கல்யாணம் செய்துகொள்ளுங்கள். உங்களுக்கென்றே ஒருத்தி சொந்தமாக இருந்தால் இன்னும் அதிகமாக முத்தங்கள் தரலாம்.

அவன்:—அப்படிச் சொல்லாதே, திருட்டுப் பணியாரத்தில் தான்

---

உண்மை யன்பினர்கள் சில நாள் ஒன்று சேர்ந்திருந்து பிரியுங்காலையில் படும் கஷ்டத்தைச் சொந்த பந்துக்களும் அனுபவித்திருக்க மாட்டார்கள்.

அதிக ருசி. வீட்டுப் பக்ஷணத்தைவிட கிளப்பு பக்ஷணமே நாவிற்கு ருசி தருகிறது. சொந்த ஸ்திரீயைவிட அன்னியப் பெண்மேல் தான் அதிக இச்சை. மனைவி என்றைக்கும் சொந்தமாய் விடுவதால் அவளிடம் மனம் புளித்துப்போகும். அன்னிய ஸ்திரீ விலகிவிடலா மானதால் அங்குதான் மேன்மேலும் ஆவல் பெருகும். பிறர் மட்டையிலுள்ள பொடியின் ருசி தன் மட்டைப்பொடியிலிருப்பதில்லை. ஆனதால் மனைவியைவிட நீயே மேல். நீதான் என் ஆசைக் கண்ணாட்டி; கற்கண்டுக்கட்டி; இன்பப் பொக்கிஷம்.

ஃ

**சாஸ்திரிகள் குமாரன்:**—ராமா லங்கையிலிருந்து அயோத்திக்கு மந்திரத்தால் ஓட்டப்பெற்ற விமானத்தில் வந்தாரென்றீர்களே? இப்போது தந்திரத்தால் ஆகாயவிமானம் மேலே பறந்தோடுகிறதே.

**ராமாயண சாஸ்திரிகள்:**—நமக்கு ஏன் அந்த வம்பு! தந்திரத்தின் விஷயங்களைத் தான் முன்னோர் மந்திரமாக வரைந்தனர். வருடத்திற்கொரு முறையேனும் முன்பு இறந்தவர்களை நினைக்கட்டும் என்றுதான் திதி ஏற்பட்டது. இவ்விதமே நெடுக யோசித்துக்கொள். ஃ

கண்ணாமூச்சி விளையாட்டில் யுவதிகள் இருவரும் ஓடியொளிந்து கொண்ட தங்கள் அண்ணனைக்கண்டு பிடித்து அவன் கைகளைப்பற்றி இழுத்தனர். தூரத்திலிருந்து கண்ட ஒருவன், ஆஹா! இவன் பாக்கியம் எனக்குக் கிடைத்திருந்தால்—என மிக விரும்பி வாயூறினன். இவன் விரும்பியதென்ன?—அந்த யுவதிகள் இருவரும் தன் கரங்களை ஸகோதர நிலையில் பற்றவேண்டுமென்றா?—அல்லது மன்மத நிலையில் காதலிகளின் முறையிற் பற்றவேண்டுமென்றா?

## கண்டிப்பு முந்தியா? கோபம் முந்தியா?

தவறுசெய்த தன் குமாரனை யொரு தந்தை கோபிக்கிறார். அதைக் கோபம் என்பதா?—கண்டிப்பு என்பதா? அவர் தன் குமாரனின் நடத்தையில் கண்டிப்புடன் கவனம் செலுத்துபவராயிருப்பதால்தான் அந்தக் கண்டிப்பின் தன்மையால் கோபம் உதிக்கின்றது. கண்டிப்பாயுள்ள ஒரு வக்கீல் தன் கக்ஷிக்காரன்--அவன் பக்கம் நியாயம் இருந்துங்கூடக் கோழைத்தனத்தால் அவன் பயப்படுகையில், இவ்விதம் அற்பத்துக்கெல்லாம் பயந்தால் உன்னை வைத்துக்கொண்டு எப்படி வழக்கு நடத்துகிறது; ஒருசமயம் நீ உன் எதிர்க்கக்ஷிக்காரனிடம் மன்னிப்பு கேட்டு எனக்கு அவமானத்தையும் உண்டாக்கிவிடலாம் என்று கோபிக்கிறார். அவர் கண்டிப்புடன் நடப்பவராதலின் இந்தக் கோபம் அவருக்கு உண்டாயிற்று. கண்டிப்புடனுள்ள உபாத்தியாயரும், எஜமானரும் சிறு பிழைக்கும் சகிக்காது கோபமடைகிறார்கள். எனவே கண்டிப்பு முந்தி; கோபம் பிந்தி.

# இரவல் பொடியின் இழிவு.

தீக்ஷிதர் :—ஓய் சாஸ்திரிகளே! நீர் ஒரு வேளைக்கு இழுக்கும் இரவல் பொடியின் அளவைக் கணக்கிட்டால் தினத்திற்கு முக்காலணு மட்டையும் போதாதே. இந்த நிலையில் ஒரு காலணு மட்டை நீர் வாங்கிக் கொள்கிறதுதானே. உமக்குப் பொடி கொடுக்கப்பட்டவன் வெகு பொறுமைப்பட்ட மனிதனாய் இருந்தால் தான் முடியும். உமக்குக் கொடுத்த பிறகு அவன் மட்டை காலியாகத் தான் இருக்கும். பிறகு அவன் வேறு வாங்கவேண்டியதே.

சாஸ்திரிகள் :—ஏதோ கொஞ்சம் பொடி இரவல் கேட்டதற்கு இப்படிப் பிரமாதமாய் அளக்கிறீரே?

தீக்ஷிதர் :—கொஞ்சம் பொடியா வாங்குகிறீர்? இதுவே கொஞ்சமாகில் அப்பொழுது உமக்கு ஒரு அணு பொடி வேண்டியிருக்கும். காலணுவுக்கு 3½-கரண்டி பொடி தருகிறான். உமக்கு 3-கரண்டி பொடி செலவாய் விட்டால் அவனுக்கு மிகுந்தது அரை கரண்டியே. இவ்விதம் பிறரைத் தொந்தரைசெய்வதில் எவ்வளவு தான் மிகவும் வேண்டியவர்களானாலும் உம் மீது அதிருப்திபடவே வைக்கும்.

சாஸ்திரிகள் :—இதுவெல்லாம் ஒரு சாமர்த்திய வித்தை. தன் கைச் செலவில்லாமலே பிழைக்கும் வழி. ஒருவன் ஒரு பக்ஷணக்கடையில் ஏதோ வாங்குகையில், நாமும் அந்த சமயம் அங்கு நின்று கொண்டால் நமக்கும் ஏதாவது வாங்கித்தருவான். இலவசத்தில் நாக்கு ருசி பார்க்கலாம். இரவல் பொடியும் இப்படியே. காசு செலவில்லாமல், கை கடிக்காமல் வலிய வருவதை ஏன் விடவேண்டும்?

தீக்ஷிதர் :—உமது போக்கைப் பார்த்தால் காசு செலவில்லாமலே ஒரு இழிந்த ஜாதிஸ்திரீ கிடைப்பாளாயின் அவளையும் உபயோகித்துக் கொள்வீர் போலிருக்கிறது. இரவல் பொடியை உறிஞ்சுவதைப் போலவே, சமயம் கிடைத்தால் பிறர் சொத்துக்களையும் அப்படியே தான் உறிஞ்சுவீர்கள் போலிருக்கிறது. நீர் இன்று முதல் காலணுவுக்காவது பொடி வாங்கிக்கொள்ளும். இல்லையாகில், உமது ஒழுக்கத்தைப்பற்றிப் பிறர் கேவலமாகவே மதிக்க ஏற்படும். உமது மூக்குக்கே என் பொடியை யெல்லாம் தொலைத்து விட்டு எத்தனையோ தடவை வேறு பொடி வாங்கி யிருக்கிறேன். அநேக தடவை பொடியில்லாமலே திண்டாடியு மிருக்கிறேன். இது சின்ன விஷயமானாலும், இதிலிருந்தும் உமது லோப குணப் போக்கைநிதானிக்கமுடிந்துவிடுகிறது

சாஸ்திரிகள் :—கேவலம் ஒரு பொடிக்கு இவ்வளவு வார்த்தை பேசுகிற அற்ப மனிதன் என்று இதற்கு முன் தெரிந்திருந்தால் உம்மிடம் பொடியே வாங்கியிரேன். இனி நீர் பொடி கொடுக்க வேண்டாம். எத்தனையோ பேர்களிடம் வாங்கிக் கொள்ள எனக்குத் தெரியும். இரவல் பொடி கொடுத்து இன்ஸால்மெண்ட் வாங்கி விட்டீரா? போம் போம்! லோபி! பிசினுரி!!

தீக்ஷிதர் :—ஒரே தடவையில் மட்டையிலுள்ள முக்கால் பொடியையும்

---

*அதிகமான கடிதங்கள் ஒருவரிட மிருந்துவர ஆரம்பித்தால், அவர்களுக்கு நம்மிடம் என்னவோ ஒரு காரிய மிருக்கிறதென்று காட்டும் அறிகுறி அது.*

இழுத்து விடவல்ல நீர் இரவல் பொடி வாங்குவதிலுள்ள இழிவை யறிய வேண்டுமென்று சொல்ல வந்தால் அதைத் தெரிந்து கொள்ளாமல் என்னை லோபி என்கிறீர். இப்படித் தான் ஏமாறிய ஒருவனிடம் அகப்படு கிற வரையில் எதையும் சுரண்டிக் கொண்டு, பிறகு அவன் ஒருநாள் தர மறுக்கையில், அவன் என்ன தந்தான் லோபி என்று பேச ஆரம்பித்து விடு வீராக்கும்! வயிறு காய்ந்த ஒரு பிச் சைக்காரனுக்கு இராஜ போஜனம் கிடைத்தால் எப்படி அளவுக்குமேல் இழுப்பானோ, அவ்விதமே நீர் இரவல் பொடியைப் பிறன் சொத்துதானே நமக்கு என்ன நஷ்டமென்று அடிக் கடி வாங்கி நன்றாய் உறிஞ்சுகிறீர்.

சாஸ்திரிகள் :—சரி, பிறகு பேச லாம், கொஞ்சம் பொடி எடும்.

தீக்ஷிதர் :—நீர் வந்தபோதே என் பொடி மட்டைக்குச் சனியன் பிடித்து அப்பொழுதே எல்லாம் ஆய் விட்டது. இனி கடைக்குத்தான் போகவேண்டும். உமக்கென்றே காலணா மட்டை தனியாக வாங்கிக் கொடுத்துப் பார்த்து மிருக்கிறேன். அதை ஒரு நிமிஷத்தில் உறிஞ்சிவிட்டு மறுபடியும் என்னிடம் இரவல் பொடி கேட்டிருக்கிறீர். உமக்குப் பொடி கொடுத்துக் கட்டாது. இவ்வளவு பலமாக உறிஞ்சுகிற நீர் தனியாக வாங்கிக்கொண்டால் என்ன கேடு?

சாஸ்திரிகள் :—நான் தனியாக வாங்குவது இந்த ஜென்மத்திலில்லை. பொடி கிடக்கட்டும், எந்தப் பத்திரி கையையாவது நான் சந்தா கொடுத்து வாங்கியதுண்டா? எல்லாம் இரவலி லேயே படித்துத் தீர்த்து விடுகிறேன். எவ்வளவோ நாவல்கள் வாசித்திருக் கிறேன். எல்லாம் இரவலில் தான். இரவல் வாங்குவதற்கு சாமர்த்திய மிரு க்கும்போது விலை கொடுத்து வாங்கு பவன் சுத்த முட்டாள் ஜன்மம்.

தீக்ஷிதர் :—உமக்குப் புத்தி சொல் லிப் பயனில்லை. காசு செலவிடா மலே பெண் சுகம் கண்டுவிட விரும்பு வோர் உம்மிடம்தான் கற்றுக்கொள்ள வேண்டும். வாரும் பொடிக்கடைக் குப் போவோம். அங்கே உமக்கென்று காலணா மட்டை வாங்கிக் கொடுத்து விடுகிறேன். என் பொடியில் கை வைக்காதிரும். (போகிறார்கள்.)

---

படித்த பெண்கள் தம்மைக் கொடுமையாகவும் அநியாயமாகவும் நடத்தி னால், படிப்பினால் விரிவுபெற்று மலர்ந்துள்ள அவர்களின் ஹிருதயம் அக் கொடுமையை—படியாப்பெண்களைவிட—அதிசீக்கிரமாய் அதைத் தாங்கொ ணாத துன்பமென்பதாய் உணர்ந்துகொள்ளுகிறது. ஆனால், தமது படிப்பின் பேரறிவினால் பொறுமைப்பட்டுச் சகித்திருக்கிற புத்தியும் அத்துடன் அவர்க ளிடம் இருக்கிறது. நிதானிப்பு சக்தியும் வேறே. பதி பக்தி மிகுந்தவர்களாத லின் எவ்வளவு கொடுமையிலும், தமது பர்த்தாவினிடம் விசுவாசமாகவே நடந்து கொள்கிறார்கள்.

---

எதற்கும் கல்வியிருந்தால்தான் தன் கடமைகளை நன்றாயுணர்ந்துகொள்ள அறிவு தோன்றும். கல்வியென்பது அதிலுள்ள ருசிகரத்தை யுணர்ந்து கொள்ளும் தன்மையுடனுள்ள கல்வியாகும். புஸ்தகம் வாங்குவதற்காகத் தன் கைமோதிரத்தை விற்றாள் ஓர் பெண். மோதிரம் பிறகு செய்துகொள்ளலா மென்றும், கிடைக்காத இந்தப் பழய காலத்துப் புஸ்தகம் பிறகு அகப்படா தென்றும் அந்த நாரீமணி நவின்றாள்.

# தொந்திச் சுப்பு



அந்தத்தெருவுக்கு அவனே ராஜா! அவனை எதிர்த்துக்கொள்ள எவரும் அஞ்சுவார்கள். தொந்திச்சுப்பு என்ருல் அழுத குழந்தையும் வாய்மூடும். வழியில் எந்தக் குழந்தையைக் கண்டாலும் அதிகாரத்துடன் அழைத்து அதன் காதைக் கிள்ளித் தலையில் ஒரு குட்டு குட்டி 'போ'—என்று துரத்துவது அவன் வழக்கம். அவனுடைய தொந்தியும் மிகப் பெரியதே. அவன் இருந்த ஊரின் ஆஸ்பத்திரிக்குப் புதிய டாக்டர் வந்து சேர்ந்தார். அவர் பெயர் காபிரியேல். அவருக்கு முன்பாகவே அங்கு ஒரு லேடி டாக்டர் இருந்தார். அவர்பெயர் திரிசூசை. காபிரியேலுக்கு லேடி டாக்டர் மீது பரம விஸ்வாசமுண்டாய் விட்டது. திரிசூசை தனது நாற்காலியிலேயே உட்கார்ந்திருக்க, டாக்டர் காபிரியேல் அவளுக்குப் பக்கத்தில் நின்றவாருகப் பேசுவார். வணங்கிய தன்மையாகக் கம்பீரத்துடன் நடப்பார். அடிக்கடி திரிசூசைக்குப் பக்கத்தில் போய் நிற்பதில் அவருக்கு ஆவல் அதிகம். இந்த சங்கதி தொந்திச்சுப்புவுக்கு எட்டவே அவன் விட்டேனு டாக்டரை என்று மீசை முறுக்கினுன். அவனுக்குக் கொஞ்சம் நெஞ்சுவலி. அதற்காக ஆஸ்பத்திரிக்கு வந்து எல்லோரும் ஒருபுறம் நிற்க, இவன் மற்ருெரு வாசல் வழியாக வேருேர் பக்கமாய் வந்து நின்ருன். அவனை டாக்டர் பார்த்து "இந்தப் பக்கம் வந்து நில்" என்ருர். "எந்தப் பக்கம் வந்தாலென்ன, இதிலே கூடவா அதிகாரம்" என்ருன் தொந்திச்சுப்பு. டாக்டர் முறைத்துப் பார்த்துவிட்டு மற்றவர்களுக்கு மருந்துச் சீட்டுகள் எழுதியபடி இருந்தார். நெடுநேரமாகியும் இவனைக் கவனிக்கவில்லை. "என்ன ஐயா, எவ்வளவு நேரம் நிற்கிறது" என்ருன் தொந்திச்சுப்பு. அதற்கு டாக்டர் "இந்தப் பக்கம் வந்துநில்" என்ருர். தொந்திச்சுப்பு ஆத்திரத்துடன் அந்தப் பக்கம் சென்று, தனக்கு நெஞ்சு வலி என்றும் பெருங்காயத் திராவகம் சேர்த்துத் தரும்படியும் கூறினுன். "எங்களுக்குக் கற்றுக்கொடுக்கவேண்டாம்" என்ருர் டாக்டர். தொந்திச்சுப்புவின் கோபம் அதிகரித்தது. கடைசியில் டாக்டர் அவன் பிரியப்படியே மருந்து கொடுத்து அனுப்பினுர். "பெருங்காயம் சேர்த்தீரா" என்ருன் தொந்திச்சுப்பு. "சரிதான் போம்" என்ருர் டாக்டர்.

ஃ

தொந்திச்சுப்பு ஒரு துள்ளு துள்ளி ஆஸ்பத்திரியைவிட்டு வெளிப்பட்டான். உடனே மேலதிகாரிக்கு டாக்டரைப்பற்றி அவர் லேடி டாக்டருடன் அதிகம் பழகுவதால் வேறிடத்துக்கு மாற்றவேண்டுமென்று எழுதினுன். அத்துடன் பொதுஜன அபிப்பிராயம் என்று முப்பது கையெழுத்துகளும் வாங்கி அனுப்பினுன். பிறகு லேடி டாக்டரின் கணவன் யார் என்று விசாரித்து ஜான்டேவிட்டைக் கண்டுபிடித்து, அவரிடம் டாக்டர் அளவுமீறிக் குலாவுவதைத் தெரிவித்தான். ஜான்டேவிட் ரயில்வேயில் கார்ட் வேலையிலிருந்தார். அவர்

---

இன்பமான இவ்வுலகம் சில சமயங்களில் சுவையற்ற—இருளடர்ந்த—திக்கற்ற—இரக்கமற்ற பாவிகளின் முன்பு தான் இருக்கிறதாய் எண்ணுகிற—ஏமாறிப்போன—நெஞ்சு புண்ணுகிவிட்ட—கோரமான இடமாக மாறிவிடுகிறது.

இதைக் கேட்டு ஆத்திரப்பட்டு, அது உண்மையா என்றார். அதற்குத் தொந்திச்சுப்பு, நீர் இல்லாத இரவுகளில் டாக்டர் உமது மனைவியின் வீட்டில் காணப்பட்டதை நான் பார்த்திருக்கிறேன் என்றான். அதை நேரில் காட்டவேண்டு மென்றார் ஜான்டேவிட். ஓ! அப்படியே. இன்று இரவு ஏழு மணிக்கு நீங்கள் ரயிலுக்குப் போவது போல் புறப்பட்டுவிட்டு 9-மணிக்கு என்னுடன் உங்கள் வீட்டுக்கு வாருங்கள்; எல்லா சங்கதியும் தெரிந்துவிடுகிறது என்றான் தொந்திச்சுப்பு.

ஃ

இரவு ஒன்பதரை மணி. லேடி டாக்டரின் வீட்டில் ஒரு கட்டிலில் டாக்டர் காபிரியேலும், லேடி டாக்டர் திரிசுசையும் ஒன்றாகப் படுத்தபடி ஒரு புஸ்தகத்தை இருவரும் வாசித்தவாறு இருந்தனர். "சீக்கிரம் படி, அடுத்த பக்கத்தைத் திருப்பு, புஸ்தகத்தை முடித்துவிட்டே தூங்குவது" என்றார் டாக்டர். இதைப் பலகணி வழியாகத் தொந்திச் சுப்பு ஜான்டேவிட்டுக்குக் காட்டினான். அதைக் கண்ட அவர்—"சரி விஷயம் மீறிவிட்டது; இனி நான் செய்வதென்ன இருக்கிறது; விவாகரத்து செய்ய வேண்டியதே; எனக்கு நேரமாகிறது" என்று கூறி ரயிலுக்குச் சென்றுவிட்டார். ஜான்டேவிட் இப்படிப் பேடித்தனமாகப் பேசிவிட்டுப் போனதும், தொந்திச்சுப்பு இவ்வளவுதானா இவன் பவிசு; ஏதாவது உதை குத்து கொலை விழுமென்றல்லவா எதிர்பார்த்தேன். ஒன்றும் காணோமே என்று ஏமாறியவனாய்த் தன் வீடு சென்றான்.

ஃ

நான்கு தினங்கட்குப் பிறகு மறுபடியும் ஜான்டேவிட்டைச் சந்தித்தான். தொந்திச்சுப்புவைக் கண்டதும் ஜான்டேவிட் தன் மனைவியின் விஷயமாய் இனி தன்னிடம் பேச வேண்டாம் என்று கண்டிப்புடன் கூறினார். நீர் கும்பகோணத்து மாமாவா என்றான் தொந்திச்சுப்பு. டேவிட் அதற்குப் பதில் பகராமலே சென்றுவிட்டார். அன்றையதினமே மேலதிகாரியிடமிருந்து அவனுக்கு வந்த கடிதத்தில் "டாக்டர்மீது குற்றமில்லை" என்று ஒரே வரி எழுதியிருந்தது. தொந்திச்சுப்பு தன் முயற்சி எல்லாம் வீணாவதைக் கண்டு நொந்தவனாய் அந்த மேலதிகாரிக்கும் மேற்பட்ட அதிகாரிக்கு டாக்டரின் நடத்தையைப்பற்றி எழுதினான். அதற்கு வந்த பதிலில் "டாக்டரையே நேரில் விசாரித்துத் தெரிந்துகொள்ளவும்" என்று கண்டிருந்தது. அந்தக் கடிதத்துடன் டாக்டரைக் கண்டு, உம்மை விசாரணை செய்ய வந்திருக்கிறேன் என்று தனக்கு வந்த அதிகாரியின் கடிதத்தைக் காண்பித்தான். அருகே ஜான்டேவிட்டும் சிரித்தபடி உட்கார்ந்திருந்தார். டாக்டர் தொந்திச்சுப்புவைப் பார்த்து, "நீர் என்னைக் கெடுக்க முயற்சிப்பது பலிக்காது; உம்மை ஒரு துரும்பாக மதிக்கிறேன்; லேடி டாக்டர் திரிசுசை என் வயிற்றில் பிறந்த என் பிரியமான ஏகபுத்திரி; தெரிந்து கொண்டீரா?" என்றார். தொந்திச்சுப்பு திடுக்கிட்டவனாய் அவமானத்துடன் வெளியிற் சென்றான். அது முதல் அவன் கொட்டமும் ஆரவாரமும் அடங்கிற்று.

---

நகைகளைவிட நல்ல புஸ்தகங்களை அதிகமாகச் சேர்த்து வைத்துக்கொள்ள வேண்டுமென்ற ஆவலும் அறிவும் நங்கையர்க்கு உதிப்பின் மகா பாக்கியமாகும். அவ்விதமின்றி பற்பொடி வைக்க ராமாயணத்தைக் கிழித்தாலோ?

வவேகம்
விநோதம்
விசித்ரம்
விகடம்




அநுபவம்
அற்புதம்
ஆச்சரிய
ஆநந்தம்

# தீபாவலி! தீபாவலி!! தீபாவலி!!!



பிறந்தது! பிறந்தது! பெரிய தீபாவலி!
சிறந்திடும் ஐப்பசி செவ்விய மாதம்!
புதுமணப் பிள்ளைகாள்! பொருள் படைத்தவர்காள்!!
மதுர உண்டிகளில் மகிழ்ந்திடு பவர்காள்!
வாங்கி மனைவியை மகிழ்விப்பதற்கு
ஏங்கிடும் அன்பர்காள்! இன்றைய பாரத
விகடத் தம்பிகாள்! விநோதத் தங்கைகாள்!!
பகட்டும் பட்டில் பரிவுறு மங்கைகாள்!
சுவை எதிர்பார்த்துச் சொள்விடு நாக்கீர்!
சுவைத்திடு முன்னே சோதிக்கும் மூக்கீர்!
விகடக் கிழவன் விளம்பும் இம்மதியில்
புகழ் தீபாவலி பொதி மூட்டைகளை
அவிழ்த்துக் கொட்டி அளந்திடு கின்றேன்!
தவிப்பை அகற்றித் தைரியம் உறுவீர்!

கண்ணன் அயராக் கணையை எடுத்து
வண்ண வில்லை வளைத்துத் தொடுத்து
நரகாசுரனை நமனுல கோட்டிய
காமுடை வீரக் காரிகை 'சத்திய
பாமை' வெற்றியைப் பார் கொண்டாட—
தீமை அகற்ற—தீபாவலியை
பரிந்து கொண்டாடப் பணித்தனர் முன்னோர்;
தெரிந்து வீரத் திருமணம் கொண்டு
செந்தமிழ் நாட்டுச் செல்வியரெல்லாம்
சிந்தை மகிழ்ந்து தீபாவலியில்
பாரத நாடு பழம் பெருமை பெற
வீரக் கண்ணனை வேண்டிடு வீர்!

ஃ

---

ஒவ்வொரு தடவையும் வரும்பொழுது என்னென்ன சுற்றிக்கொண்டு மூட்டை கட்டிப்போகலா மென்று சிலர் நினைக்கிறார்கள்; ஆராய்கிறார்கள்.

“ஆண்டுக்கொரு நாள்! அகம் மகிழ்வுறவே
வேண்டும் எந்த வித சேலையையும்
பணமிலை என்று பதில் பகராது
சுணக்கம் உறுது சோர்விலராக
எவ்விதமேனும் எனக்கென வாங்கிச்
செவ்விய மதிப்பைச் சேர்விக்க வேண்டும்”—
எனப் பிடிவாதத் தினில் ஊன்றி நிற்கும்
மனமுடை மங்கைமீர்! மகிழ்வொடு கேளீர்.

ஃ

கணவன் எப்புடவை களிப்பொடு கொடுப்பினும்
முணு முணுப்பின்றி முகமலர்ந்(து) ஏற்றல்
உத்தம பத்தினிக்(கு) உரிய நன்னெறியாம்:
எத்தகை நிலையிலும் இன்பமே காணல்—
‘போதும்’ எனும் மனம் பொன்செய் மருந்(து) எனும்
நீதியை உணர்தல்—நேரிய ஆகும்.
தீபாவலியாம் திருநாள் தனில்
கோபாவேசம் கொண்டு, மகிழ்ச்சியைக்
குலைத்து மனையைக் கொடுஞ் சமர்க்களமாய்
அலைத்தல் உத்தம அணங்குகட்(கு) அழகல.

ஃ

பத்தினி மனையில் பகர் தீபாவலி
எத்தனை தினங்கட்(கு) இருக்கக்கூடும்?
விருந்தருந்த விரும்பி செல்பவர்கள்
பரிந்துபசரிக்கும் படியைக்கண்டு,
மூன்று நாள் தங்கி முறுக்காய்த் திரும்பின்
தான்றன் மதிப்பைத் தளரவிடாமல்
கண்ணியம் பெறலாம் கருதிடுவீரே!
புண்ணிய வசத்தால் பொருள் மிக்குடையோர்
மாமனராக வாய்த்திடுவாரேல்,
தாமங்(கு) என்றும் தங்குவதாயின்
கவலை யற்றிருக்கக் கருதுதல் கூடும்;
அவனியில் அவ்வாழ்(வு) அது சிலர்க்கேயாம்!
தீபாவலியில் திண்டி விழுங்கிச்
சோபாக்களிலே சொகுசாய்ச் சாய்வோர்
நாலாம் நாளே நலமுறப் புறப்படல்
மேலாம்; உணர்வீர்! விகடன் விளம்பினேன்!

ஃ

நம்மை ஒரு காலத்தில் கேவலம் செய்து சிறுதுரும்பாக நினைத்தவர்கள் இப்பொழுது வெகு கௌரவமாகக் கடிதங்கள் வலிய வலிய எழுதுகிறார்கள்.

குறும்புகள் செய்தும் கூடிக் குலவியும்
குறுநகை புரியும் குழந்தைகளே! பல்
வகை வாணங்களை வாங்கி வீடெங்கும்
புகை மயமாக்கும் புத்தி கொள்ளாதீர்!
பட்டாசு சுட்டுப் பல பல துன்பம்
பட்டார் பலருளர்; பாலரே! அறிமின்!

ஃ

பல பண்டங்களும் பகர் இந்நாளில்
விலை மிகக் குறைந்து விற்பனவாயினும்,
விவசாயிகள் பால் 'வெள்ளையப்பன்'
உவப்புற முன்போல் உலவக் காணேம்!
'இவ்வருடத்தில் எவ்விதம் பண்டிகை
செவ்விதில் நடத்தல்? செலவுக்(கு) இலை வழி!'—
என்று நெஞ்சம் ஏங்கி நிற்பவர்கள்
இன்று இந்நாட்டில் எண்ணிலர் அந்தோ!

ஃ

வறிஞர் படுந்துயர் வகைகள் பலவும்
அறிந்திருந்தும் அன்னியத் துணிகள்
விலை கொடுத்துப்பெறல் வெம்பாவ மன்றோ!
கலைகளை எல்லாம் கதராய் வாங்கி
தீபாவலியிற் செவ்விதி லணிந்து,
மாபாவங்கள் மனம் உறுவாறு
அருளும் வண்ணம் ஆண்டவன்றன்னை
உருகும் உள்ளத் துடன் வேண்டுவீரே!

ஃ

பலகாரமென்று பல ஆகாரம்
செலவை எண்ணுது செய்தித்துண்ணும்
செல்வர் களித்துச் செருக்கிக் கிடக்க,
வல்வினைப் பயனுல் வறிஞராய் உழல்வோர்
துட்டு கையின்மையால் சோர்வுற்றவராய்
இட்டிலி தோசை என்பன செய்து
நரக சதுர்த்தசி நாளது தன்னில்
பரமன் றனக்குப் படைத்(து) உண்டிடுவர்:

ஃ

---

பலாப்பழத்துடன் நம் வீட்டிற்கு வருவோர் தங்கள் ஊரில் அதைப் புசிப்பதற்காகவென்று உடனே புறப்பட்டுவிடுவோரா யிருக்கலாம். நமக்காகவே அதைக் கொண்டுவந்திருப்பின் பலநாட்கள் தங்குவோராயிருக்கலாம்.

நெருங்கிய உறவினர் நீங்கிட, பண்டிகை
விருந்து கொண்டாடும் விதம் இல்லாராய்
இறந்தவர்தமை எண எய்தும் சஞ்சலம்
மறந்திருக்கும் வகை அறியாது,
"இன்(று) அவர் இருப்பின் எவ்வள(வு) இன்பம்
துன்றிடும்! அந்தோ! துன்பங்களன்றோ
இத்திருநாளில் எய்தின!"—என்று
மெத்தவும் நெஞ்சம் மெழுகென உருகி,
புண்ணிய தினமாய்ப் புகலும் இந்நாளில்
கண்ணீர் சொரிந்து கலங்குவர் சிலரே!

ஃ

"அரக்க நீர்மைகள் அனைத்தும் அகற்றி
இரக்க மனத்தை இன்று தொட்டெனக்கு
அருள்க"—என்று ஆண்டவனைக் குறித்(து)
உருகி வேண்டற்(கு) உரிய நன்னாளில்
கள்ளருந்திக் கரி தின்று திரிதல்
எள்ளி நகைக்க இடந்தரு மன்றோ!
கண்டவர் இகழ்ந்து காரியும் உமிழத்
தண்டனைகள் பல சார்விக்கும் கள்,
தீபாவலியில் சிறப்பாய்க் குடிக்க
மாபாவிகள் எவர் வகுத்தனர் கொல்லோ?
ஆடுகள் கோழிகள் அலறித் துடித்துப்
பாடு படுவதைப் பார்த்தும், இரக்கம்
சிறிது மின்றிச் சித்திர வதை புரி
வெறியர் கொடுமையை விகடன் என்னனென்பேன்!
ஏழைப் பிராணிகள் எய்து திண்டாட்டம்
கோழை வெறியர்க்குக் கொண்டாட்டம் அந்தோ!
தீபாவலியின் திருப்பெயராலே
மாபாதகம் செய் வன்னெஞ்சினர்காள்!
கொலை செயும்போது கொண்டிடும் இன்பம்
மலை நிகர் துன்பமாய் மறுமையில் வருத்தும்
தெய்வ தண்டனை சேர்ந்திட, கடிதின்
எய்துவர் கொடிய இன்னாத உலகை:
ஆதலால் தீவினைக்(கு) அஞ்சி நடப்பீர்!
காதலால் விகடன் கழறினேன் உணர்வீர்!!

ஃ

---

வைத்தியமோ, படிப்போ புஸ்தகத்தைப் பார்த்துக் கற்றுக்கொண்டவுடனே கெட்டிக்காரராகிவிட முடியாது. எதிலும் அனுபோகத்தால்தான் தேர்ச்சி பெறவேண்டும். அநுபோகம் கண்டவன் அடங்கி நிற்பான்.

'தீபாவலி' எனில், சிறுவர் சிறுமியர்,
கோபாவேசம் கொள்ளும் மனைவியர்,
புது மணப்பிள்ளைகள், பொக்கையாய்க் கிழவர்,
வித வித சேலை வியாபாரம் செய்
வர்த்தகர், வறிஞர், வாணியர் முதலாம்
எத்தகையினர்க்கும் இன்பம் தோன்றும் !
எளிய பிராணிகள் எய்தும் துன்பம் !!
**களிப்பெல்லோர்க்கும் கலப்பதன்றோ முறை !**

ஃ

இவ்வருடத்(து) அவ் இனியநற்பண்டிகை
எவ்வகையினர்க்கும் இன்பமாய் முடிய
கூனிய முதுகும் கோணைத் தடியும்
பானிற மயிரும் படைத்த பழங்கிழ
விகடன் உபாயம் விளம்புகின்றேன் : அதை
அகத்தில் கொண்டு ஆனந்தம் அடைவீர் !
'உள்ளதில் த்ருப்தி ; உயர் தேசபக்தி ;
கள்ள நெஞ்சின்மை ; கருணை ; நற் பொறுமை ;
தெய்வ பக்தி; தீவினை அச்சம்
துய்ய வாழ்வு தொடங்கலில் உறுதி'
என்பனவற்றை எய்திடுவீரேல்,
அன்பும் இன்பமும் அகந்தொறும் ஓங்கும்.
அத்தகை நிலையை அருள் செய, தெய்வ
வித்தகன்றன்னை விகடன் வேண்டினேன் ;
ஓம் ! ஓம் ! தேவ ! உவந்(து) அருள் பொழிவாய் !
ராம் ! ராம் ! சுபம் ! சு ! சுவாஹா ! சுவாஹா ! !

இங்ஙனம்

விகடப்பிரதாப ராஜேந்திர சந்நிதானத்தின் உத்திரவுப்படிக்கு,

ஆரியூர்—வ. பத்மநாப பிள்ளை.

'விகடப் பிரதாப' சமஸ்தான வித்வான்.

---

யார் அதிக அனுபவம் பெற்றவர்களோ அவர்களைத்தான் மற்றவர்கள் அதிகமாக ஏமாற்றப் பார்க்கிறார்கள். அந்த அனுபவசாலிகள் தங்களின் கபட மற்ற நெஞ்சால் ஏமாறியும் விடுகிறார்கள். அவ்விதம் ஏமாறிப்போனதை ஒரு படிப்பினையும் புத்தியுமாக்கி அதைத் தங்கள் நூலிலும் சேர்க்கிறார்கள்.

---

நம் வீட்டுக்கு வரும் பிறர் தங்கட்கு நல்லெண்ணமிருப்பதாக வெளிக்கு சமிக்ஞை செய்தபோதிலும், அது அநேக சந்தர்ப்பங்களில் அந்தரங்க சுத்தி யுடன் கூடியதல்லாததாகவும் இருக்கலாம். இவ்விதமே மாதர்கள் அன்னிய ஆடவர்களுடன் பழகுகையிலும் அவர்களை அந்தரங்க சுத்தியுள்ளவர்களென்று எண்ணிவிடலாகாது. ஆண்களில் கற்பை விழுங்கும் பூனைகள் எத்தனையோ லக்ஷம் உண்டு.



## இரண்டு! இரண்டு!!

அம்மியும் குழவியும் இரண்டு.
ஆணும் பெண்ணும் இரண்டு.
இருளும் வெளிச்சமும் இரண்டு.
ஈகையும் உலோபகுணமும் இரண்டு.
உரலும் உலக்கையும் இரண்டு.
ஊசியும் நூலும் இரண்டு.
எருதும் கலப்பையும் இரண்டு.
ஏற்றுமதி இறக்குமதி இரண்டு.
ஐசுவரியமும் தரித்திரமும் இரண்டு.
ஒருமையும் பன்மையும் இரண்டு.
ஓடமும் கப்பலும் இரண்டு.
கல்வியும் கல்லாமையும் இரண்டு.
காங்கையும் குளிரும் இரண்டு.
கிழவனும் வாலிபனும் இரண்டு.
கீர்த்தியும் அபகீர்த்தியும் இரண்டு.
குருவும் மாணாக்கனும் இரண்டு.
கூடுதலும் குறைதலும் இரண்டு.
கெருடனும் பாம்பும் இரண்டு.
கேதும் இராகும் இரண்டு.
கொண்டையும் பூவும் இரண்டு.
கோவிலும் குளமும் இரண்டு.
சமாதானமும் கலகமும் இரண்டு.
சாவியும் பூட்டும் இரண்டு.
சிலேட்டும் பென்சிலும் இரண்டு.
சீரும் இழிவும் இரண்டு.
சுலபமும் பிரயாசையும் இரண்டு.
சூரியனும் சந்திரனும் இரண்டு.
செழிப்பும் வாட்டமும் இரண்டு.
சேலையும் ரவிக்கையும் இரண்டு.
சைக்கலும் மோட்டாரும் இரண்டு.
சொஸ்தமும் உபாதையும் இரண்டு.
சோம்பலும் சுறுசுறுப்பும் இரண்டு.
தந்தையும் தாயும் இரண்டு.
தாகமும் பசியும் இரண்டு.
தித்திப்பும் புளிப்பும் இரண்டு.
தீபமும் திரியும் இரண்டு.
துற்கந்தமும் நற்கந்தமும் இரண்டு.
தூய்மையும் மாசும் இரண்டு.
தெளிவும் கலங்கலும் இரண்டு.
தேயிலையும் காப்பியும் இரண்டு.
தைரியமும் பேடித்தனமும் இரண்டு.
தொப்பியும் தலைப்பாகையும் இரண்டு.
தோற்பும் கெலிப்பும் இரண்டு.
நன்செய் புன்செய் இரண்டு.
நாயகனும் நாயகியும் இரண்டு.
நீளமும் குட்டையும் இரண்டு.
நீரும் பூமியும் இரண்டு.
நுண்மையும் பருமையும் இரண்டு.
நூதனமும் பழமையும் இரண்டு.
நெய்யும் வெண்ணெய்யும் இரண்டு.
நேசமும் பகையும் இரண்டு.
நைந்துருகுதலும்தேறுதலும்இரண்டு
நொய்மையும் திண்மையும் இரண்டு.
நோயாளியும் திடசரீரமும் இரண்டு.
பருத்தியும் பட்டும் இரண்டு.
பாட்டனும் பாட்டியும் இரண்டு.
பிரகாசமும் மந்தமும் இரண்டு.
பீடியும் சிகரட்டும் இரண்டு.
புண்ணியமும் பாவமும் இரண்டு.
பெருமையும் சிறுமையும் இரண்டு.
பேதமையும் ஞானமும் இரண்டு.
பைசலும் தீராமையும் இரண்டு.
பொறுமையும் கோபமும் இரண்டு.
போலியும் உண்மையும் இரண்டு.
மகிழ்ச்சியும் விசனமும் இரண்டு.
மாப்பிள்ளையும் பெண்ணும் இரண்டு.
மின்னலும் இடியும் இரண்டு.
மீகாமனும் மரக்கலமும் இரண்டு.
முன்னும் பின்னும் இரண்டு.
மூடனும் புத்திமானும் இரண்டு.
மென்மையும் திண்மையும் இரண்டு.
மேன்மையும் தாழ்வும் இரண்டு.
மையும் எழுதுகோலும் இரண்டு.
மொத்தமும் சில்லறையும் இரண்டு.
மோட்சமும் நரகமும் இரண்டு.
யஜமானனும் ஊழியனும் இரண்டு.
யூகமும் நிதானமும் இரண்டு.
யௌவனமும் குருபமும் இரண்டு.
வட்டியும் முதலும் இரண்டு.
வாதியும் பிரதிவாதியும் இரண்டு.
வினாவும் விடையும் இரண்டு.
வீடும் காடும் இரண்டு.
வெண்மையும் கருமையும் இரண்டு.
வேவித்தலும் வறுத்தலும் இரண்டு.

S. K. பிச்சை முத்துராஜா.

எப்போது நமது வீட்டுக்காரிக் கெனத் தீபாவலியில் சேலை எடுப் போமோயென்று கல்யாணமாகாத வர்கள் ஏங்க, எப்படி இந்தத் தீபா வலி போகுமோவென்று விவாக மானவர்கள் பெருமூச்சு விடுகிறார் களாம்! ஃ

கள்ளு சாராயக்கடை மறியல் தீபாவலியில் செல்லாதென்று மதுரை வீர ஸ்வாமி பந்தயம் போடுகிறாராம்!

ஃ

அன்னியத் துணியை விலக்கி னாலும், எங்களைத் தீபாவலியில் விலக் கமுடியாதென்று பட்டாசு, மத்தாப் புப் பெட்டிகள் கூறுகின்றனவாம்!

ஃ

சுயராஜ்யம் கிடைத்த பிறகு இந்தியர்கள் உபயோகிக்கப்போகும் அஹிம்ஸா தர்மத்துப்பாக்கிகளைத்தீபா வலியில் கடைகளில் பார்க்கலாமாம்!

ஃ

மருமகனுக்குத் தீபாவலியில் எல் லாம் கதராகவே எடுத்துவிட்டால் செலவுகள் மிகவும் குறையுமென்று மாமி வீட்டார் யோசிக்கிறார்களாம்!

ஃ

ஏண்டி, நான் இன்ன சேலை தீபா வளிக்கு எடுக்கப் போகிறேன்—நீ என்ன சேலையடி எடுக்கப் போகிறாய் என்று கிணற்றங்கரையும் ஆற்றங் கரையும் பேசிக் கொண்டதுகளாம்!

ஃ

ஊரத்திலிருக்கும்போது தான் தீபாவலி அதிக வசிகரத் தோற்றத்தி லிருக்குமாம்! தீபாவளியன்று தோசைவாய்க்குள் போனதும் அத் துடன் தீபாவலியும் ஆகிவிடுமாம்!

ஃ

இன்னொருபெண்ணையும் கட்டிக் கொள்ள ஆசைதானும்! ஆனால், தீபா வலியில் அவளுக்கும் சேலை எடுக்க வேணுமே யென்று பின்னடைய நேருகிறதாம்! ஃ

தீபாவலியில் பொய், மோசம், புளுகு, ஏமாற்றுதல் செய்யாத வியா பாரிகள் நரகத்திற்குத் தான் போவார் களாம்! ஃ

தீபாவளியில் பட்டுத்துணி, சீட் டுத்துணி வகையில் எவ்வளவு கஜம் வரையில் அமுக்கிக்கொள்கிறதென்று தையற்கடைகள் ஒரு மீட்டிங்கு கூடி யோசித்தனவாம்! ஃ

தீபாவலியில் எவ்வளவு பேர் கடன் வாங்கப் போகிறார்களென்று விகடன் ஒரு கணக்கு எடுக்கப் போகிறானும்! ஃ

தகப்பனாரின் பெட்டிச் சாவி என்னிடமிருந்தால், தீபாவலிக்கு எப்படித் தாராளமாய்ச் செலவிடு வேன் தெரியுமா?— என்று ஒரு சிறு வ்ன் விகடனிடம் கூறினானும்!

ஃ

தீபாவலிக்காவது நல்ல திக்கான காபிவைத்து நன்றாகச்சாப்பிடவேண் டுமென்று ஒரு தாதா கூறுகிறார்!

ஃ

தீபாவலிக்குப் பயந்து வெளியூ ருக்கு ஓடி விட்டவர்களுக்குத்தான் அதிக சுகமாம்! ஃ

தீபாவலியில் மாப்பிள்ளை வீட்டா ருக்கு சந்தோஷமாம்! பெண் வீட் டாருக்கோ இரும்புப்பெட்டி காலி யாகி விடுமாம்! ஃ

குழந்தை பிறக்கிற வரையில் தீபா வலிக்கு மாமி வீட்டார் மரியாதை செய்ய வேண்டாமா என்று ஒரு மரு மகப்பிள்ளை விகடனிடம் முறை யிட்டுக் கோபித்துக் கொண்டாராம்!




## 3. இல்லறம்.

(465-ம் பக்கத் தொடர்ச்சி.)

244. "கொண்ட பெண்ஜாதியே கூர் அரிவாளா யிருந்தாள்."



மற்றவர்கள் மீது குற்றஞ் சொல்லிப் பயனில்லை, எல்லாக் குற்றங்களுக்கும் மூதற்காரணம் கொண்ட பெண்ஜாதிதான். அவள் குணமும் வாயும் சரியாக இருந்திருந்தால் குடித்தனம் இவ்வளவு தாறுமாறாகப் போயிராது. மற்றவர்கள் கெடு சிந்தனையுடனிருந்தாலும் இவள் புத்திசாலியாக இருந்தால் எவ்வளவோ சமாளித்துக்கொண்டு போயிருக்கலாம். கொண்டவன் மீதாவது மதிப்பு வைத்து உள்ளடங்கி நடந்துகொண்டிருந்தால், வீட்டிலுள்ளவர்களுக்கு வீட்டுக்காரனின்மீது ஒரு கௌரவம் இருந்திருக்கும். அதையும் இவள் கெடுத்துவிட்டதில் வீட்டுக்காரனை மற்றவர்கள் ஒரு இளப்பமாக மதித்து விடலானார்கள். அண்டை அயலிலுள்ளவர்களுக்கும் வீட்டுக்காரியிடம் உறவாடிக்கொண்டால் வேண்டியது பிடுங்கிக் கொள்ளலாமென்று தோன்றிப் போய்விட்டது. வீட்டுக்காரன் கொண்டுவந்து கொட்டவேண்டியது தான். வீட்டுக்காரி கண்டவர்களுக்கும் எடுத்துக்கொடுத்து வாரி யிறைக்க வேண்டியதுதான். மற்றவர்கள் இவளிடம் இரவல் வாங்கித் தங்களுக்குக் கைச்செலவு இல்லாமல் அந்தந்த வேளையில் தங்கள் சம்சார வேலைகளை எவ்வளவு சுலபமாய் நடத்திக்கொண்டு போய்விடுகிறார்களென்று இவள் புத்தியிலும் படுவதில்லை. மற்றவர்களுக்கு ஒரு சாமான் தேவையானால் இவளிடம் இரவல்பெற்று அந்த வேளையைப் போக்கிவிடுகிறார்கள். இவளுக்கு அதே சாமான் வேண்டியிருந்தால் தன் கணவனிடம் சொல்லி, அவர் கடைக்குப் போய்ப் பணத்துக்கு அவற்றை வாங்கி வரவேண்டி யிருக்கிறது.

ஃ

இன்னும் ஒரு நோன்போ விரதமோ வீட்டில் நடக்கையில் அதை வீட்டோடு செய்துகொண்டு சிக்கனமாகப் போவதைவிட்டு பந்துக்களின் வீட்டுக்குச் சொல்லியனுப்பி விடுவதில், அவர்களெல்லாம் வீட்டுக்காரனே அழைத்ததாக எண்ணிக்கொண்டு வண்டிச் செலவுகள் செய்து வந்து சேருகிறார்கள். அவர்கள்மீது ஒரு குற்றமும் இல்லை. செலவுகளோ ஏராளமாய் விடுகிறது, எட்டு அணாவில் முடியக்கூடிய ஒரு விரதச்செலவு பல ரூபாய் வரைக்கும் எட்டி விடுகிறது அந்தப் பந்துக்கள்மீதுள்ள சிரத்தையில் நூற்றிலொரு பங்குகூடக் கணவன்மீது இருப்பதில்லை. அவர்கள் இரவு 11-மணிக்கு வந்தாலும் சாதம் சமைத்துப் போடப் புத்தி செல்லுகிறது. கொண்டவனுக்கோ ஒரு விரதநாளில் இரவுக்கு ஒரு பலகாரம் செய்துவைத்து வீட்டோடு உண்

ணும்படி புரிவதில்லை. அவன் அன்றையதினம் பலகாரக் கடையைத் தேடிக் கையில் காசு எடுத்துக் கொண்டு போகவேண்டி யிருக்கிறது!

ஃ

இதுதான் போகட்டும், எவ்வளவோ பாடுபட்டுப் பணம்வந்து, அந்தப் பணத்திற்குச் சகலமும் வாங்கிச் சமையலாகிச் சாப்பிடும்போது சமாதானமாக உண்ணும்படி செய்யக் கூடாதா? அந்த சமயத்திற்கு ஒரு சண்டையைக் கிளப்பிக்கொண்டு உண்ணுஞ் சோற்றை விஷமாக்கி விடுகிறாள். அவன் பாதி புசித்து மற்றொரு குழம்பு ரசத்துக்கு மனைவியை எதிர்பார்ப்பதில் அவன் அருகிலிருக்கக் காணோம். அவள் பக்கத்து வீடு சென்றாளோ, யாருடன் பேசிக் கொண்டு நிற்கிறாளோ—அவள் வரும் வரையில் காத்திருக்க வேண்டியதாகிறது; அல்லது இவனே எழுந்து சென்று குழம்பையோ ரசத்தையோ ஊற்றிக்கொள்ளவேண்டி வருகிறது. மோர் ஊற்றினவன் உப்பு போடாமலே போய்விடுகிறாள். இவ்விதம் உண்பதிலும் எவ்வளவோ அலங்கோலங்கள்! உட்பட்டுப்போகிற குணமில்லாத பெண்களின் குடித்தனம் விடியாது. வீட்டுச் சங்கதிகள் வெளியில் போய்விடுவதிலுள்ள அனர்த்தங்களையும் சொல்லிமுடியாது. புருஷன் வீட்டைச் சேர்ந்தவர்கள் எவரிடமும் ஒவ்வொரு விரோதம். தானே நகைகளைக் கழற்றிவிட்டுக் கணவன் கழற்றிக் கொண்டதாகத் தோன்றும்படி செய்வதில், அதை வருவார் போவார் கண்டு வீட்டுக்காரனைக் கேட்கப் புகுவதில் தன்வீட்டு விஷயத்தை வெளிவிட விரும்பாத அவன் ஏதோ ஒரு பதிலைச் சொல்லித் தொலைத்து அனுப்ப வேண்டியதாகிறது.

ஃ

இனி வரவு செலவு நிலைமைகளை வீட்டுக்காரன் கவனித்துச் செலவிட வேண்டியதாயிருப்பதில், இவள் செய்யும் விபரீதங்களால் வரவுக்கு மீறிக் கடனும்பட்டுக் கலங்க நேருகிறது. ஒருநாட்பொழுது சமாதானமாகப் போகவேண்டுமே யென்று வீட்டுக்காரன் நினைக்கும்படியாய் விடுகிறது. என்னதான் தன் மனைவியின் பிரியப்படி நடந்துகொண்டாலும் அவளுக்கு அவன்மீது விஸ்வாசம் எள்ளத்தனையும் இருப்பதில்லை. அவனைக் கணவனாகவே மதிப்பதுமில்லை. அதைவிட ஒரு பிச்சைக்காரனிடமாவது அவள் அதிக மரியாதை செய்கிறாளென்று சொல்லலாம். வீட்டில் உண்டாகும் கலகங்களால்—மனைவியிருக்க, மக்கள் இருக்க, மருமகப் பிள்ளைகள் நாலு ஊர்களில் நல்ல நிலைமையில் இருக்க, இன்னும் உறவு சுற்றங்கள் இருக்க, இவ்வளவிருந்தும் வீட்டுக்காரன் தன் வயிற்றுக்குக் கிளப்புகளில் சோறு உண்டு காலந்தள்ளவேண்டியிருக்கிறது. வீட்டில் புசிக்காமல் வெளியில் என்னவோ கொட்டிக் கொண்டு காலம் கடத்துகிறாரே என்று மனைவியாக வந்தவள் இரக்கப்படுகிறாளா—அல்லது வீட்டில் புசிக்கும்படி வற்புறுத்துகிறாளா அதுவும் இல்லை. அவன் வெளியில் புசிப்பதைப் பற்றி ஒரு கவலையுமே அவள் படுவதில்லை. தன் பாட்டில் உண்டு உடுத்து அவ்வளவில் இருந்து விடுகிறாள். இத்தகையவளுக்கு அவள் தாய்வீட்டாரேனும் புத்தி சொல்லி வாழ வைக்கிறார்களா வென்றால் அதுவுமில்லை.

---

இரவுமுழுதும் விளக்கு எரிவது சரிதான். விடிந்த பிறகும் எரிகிற விளக்கை அணைக்காது படுத்துள்ள பெண்ணை—இவள் வாழ்வும் இப்படித் தான் இனி படுத்துக்கிடக்குமோவென்று எண்ணவும் இடமேற்பட்டுவிடலாம்.

இன்னும் அவனைத் தூண்டிவிடுவோராகவே இருக்கிறார்கள். கணவனுக்கும் மனைவிக்கும் ஒரு பெரிய கலகம் நடந்து அடிதடியாகி அவன் தாய் வீட்டுக்கு அவன் சொல்லியனுப்பினால், அவர்களோ இந்த சண்டைமுடிந்து அவர்களுக்குள் சமாதானமாய்ப் போனபிறகு தாங்கள் சென்றால் தான் நாலு நாட்கள் உட்கார்ந்து தின்ன முடியுமென்று ஒரு வாரம் பத்துநாள் பொறுத்துச் சாதாரண மனிதர்கள் போல வருகிறார்கள். இவர்களின் குணப்போக்குகளைக் கண்டுகொண்ட வீட்டுக்காரன் இவர்களுக்கு என் சொல்லியனுப்பினோம் என்று தன்னுள் நொந்துகொண்டு மவுனமாயிருந்துவிடுகிறான். வந்தவர்களும் நன்றாகத் தின்று கொழுத்துவிட்டுத் தொலைகிறார்கள். இதுதான் இவர்கள் சமாதானம் செய்ய வந்ததுபோலும்.

ஃ

சில சமயங்களில் இவர்கள் தங்கள் குமார்த்திக்குப் புத்திமதி சொல்லி வீட்டுக்காரனையும் சமாதானப்படுத்தி இரண்டு பக்கமும் மேளம் அடிப்பதுண்டாயினும், அந்த சமாதானம் வெறும் பாசாங்கும் நடிப்பாகவுமே முடிகிறது. மனைவி மிக்க குணவதி போலும், வெகு பக்ஷமுள்ளவள் போலும் பசப்பத் தொடங்குகிறாள். கணவன் அதை நம்பிக்கொள்கிறான். இவள் இனி நல்ல வழியில் திரும்பி விட்டாளென்று எண்ணுகிறான். ஆயினுமென்ன? நாலைந்து தினங்கட்குப் பிறகு அவள் பழயபடியே மாறத் தொடங்கிவிடுகிறாள். மனதில் உண்மையான விசுவாசமும் அன்புமிருந்து, கணவனுக்குப் பணிவிடை செய்ய வேண்டுமென்ற ஆவல் இயற்கையாகவே அமைந்து, அவ்விதம் செய்யும் பணிவிடைகளைப் புண்ணிய கைங்கரியமாகப் பாவிக்கிற பெரிய புத்தியிருந்தாலல்லவோ அவள் கிரமமாக நடப்பாள். அந்தப் புத்தியில்லாமல் வெளிக்கு அவனை மயக்குவதற்காகப் பட்டாங்கடிப்பவள் எங்கே உண்மையானபடி நடக்கப்போகிறாள்?

இவ்வித சண்டையிலே மனைவி அறைக்குள் புகுந்து கதவை மூடித் தூக்கிட்டுக் கொள்ளப்போவதாய் ஆர்வாரிக்கிறாள். கணவன் ஓடிப் பக்கத்து வீட்டாரை யழைத்துவந்து கதவைத் திறக்கும்படி செய்யப் படாதபாடு படுகிறான். பக்கத்து வீட்டார் கடைசியில் கதவையே வேறேயாக எடுத்து வைத்து விடுகிறார்கள். இப்படிப் பலதடவை பட்டுத் தேறிய புருஷன் மற்றொருநாள் அப்படியே அவள் கதவை மூடித் தூக்கிட்டுக்கொள்ளப் போவதாக ஆரவாரிக்கையில், எக்கதியாவது கெட்டுப்போ என்று வெளியில் போய் விடுகிறான். கடைசியில் அறைக்குள்ளிருக்கும் இவள் வெளியில் எந்தக் கூச்சலையும் காணாதவளாய்க் கதவைத் திறக்க அங்கு எவரும் இல்லாதது கண்டு ஏமாறுகிறாள். இவ்விதமான பெண்களை மனைவிகளாகக் கொண்டவர்களின் கண்ணீர் கடவுளுக்கே தெரியும். அத்தகையோர் மனம் நொந்து துடிக்கும்போது தங்களின் எல்லாக் கஷ்டங்களுக்கும்--கொண்ட பெண்ஜாதியே கூர் அறிவாளாயிருந்தாள் என்று சொல்லிக்கொண்டு அங்கலாய்க்கிறார்கள். இவ்விதம் குடித்தனத்தைத் தாறுமாறு படுத்துவதில் இந்தப் பெண்கள் என்ன லாபம்—பெருமை யடைகிறார்களோ தெரியவில்லை. கணவனின் கண்ணீர் வீணாவதுமில்லை. கணவன் காலத்துக்குப் பிறகு இவர்களின் வாழ்வு நல்ல வாழ்வாக இருப்பதுமில்லை. முன்செய்த தீவினைக்குப் பத்துபங்கு அனுபவித்து நொந்து, ஊர் முழுதும் காரித்துப்ப, எங்கும் கேவலப்பட்டு, மதிப்பிழந்து, எங்குமே கடனாகி புன்மனதுடனே பச்சைப் பல்லாக்கு ஏறுகிறார்கள்!






தீபாவலிக்காக நமது கடையில் இன்று ஒரு விசேஷக் கூட்டம் கூடிற்று. எல்லோரும் கதரே யணிவதென்றும், தீபாவலி நாளன்று மது மாமிஸாதிகளைத் தவிர்த்துப் பரிசுத்தமாய் நடந்துகொள்ள வேண்டு மென்றும் தீர்மானங்கள் செய்தனர். தீபாவலி தீர்மானங்கள் சரிதான், கையில் பணமில்லையே என்றார் ஒருவர். எவ்வளவு பணம் வந்தாலும் தீபாவலியில் போதாது என்றார் இன்னொருவர். இருக்கோ இல்லையோ, கடன் வாங்கியேனும் வீட்டுக்காரியைத் திருப்தி செய்யாவிடில் சமாதானமாய் இலையில் உட்கார முடியாதென்றார் மற்றொருவர். எது வாங்கினும் வாங்காவிடினும் பட்டாசு மத்தாப்பு கடைக்குக் குறைந்தது இரண்டு ரூபாயாவது தொலைக்காவிடில் நம் வீட்டுக் குழந்தைகளிடமிருந்து தப்ப முடியாது என்றார் வேறொருவர். எல்லாம் பணத்திலிருக்கிறது; அந்தப்பணமோ நெடுந்தூரத்திலிருக்கிறது ; கையிலுள்ள பணமோ ஒரு ரவிக்கைச் சீட்டி வாங்கவும் போதாது. பெண்கள் போடுகிற ஜாப்தாவோ தூரத்திலிருக்கிற பணம் வந்தாலுங்கூடச் சரிகட்டாது. இவ்வளவு செலவிட்டும் வீட்டில் திருப்திதானா என்கிற விஷயம் பெரிய சந்தேகந்தான்! அமாவாசையைப் போல் தீபாவலி மாதந்தோறும் வந்து விடாமல் வருஷத்திற்கு ஒரு நாளாக வருகிறதே, அதுவும் பெரிய புண்ணியம் தான் என்றார் ஒரு ஸம்சாரி. கும்பகோணத்து மகாமகம் போல பன்னிரண்டு வருஷங்கட்கு ஒரு முறையாகத் தீபாவலி வருவதாயிருந்தால் இன்னும் எவ்வளவோ மேலாக இருக்கும் ; பணத்திற்கு அலைய வேண்டிய கஷ்டமும் சுருங்கும் என்றார் உக்காபிரதர். மாதந்தோறும் ஐந்து ரூபாய் வீதம் எடுத்து வைத்திருந்து வருஷத்தில் அதை 60-ரூபாயாக்கிக் கொண்டு தீபாவலியில் எவ்வித சிரமமுமின்றிச் செலவிட்டுக்கொண்டு ஆநந்தப்படுகிறது தானே; இந்த சுலபவழி தெரியவில்லையே என்றார் கலியாண மாகாத கல்யாண சுந்தரம். அடேயப்பா! நீ இனி கல்யாணம் செய்து கொண்டு கலியாண சுந்தரமாகும்போது மாதம் ஐந்து ரூபாய் மீத்து வைக்கவும், அதிற் கைவைத்து விடுகிற அவதிகள் வராமலே சேர்த்துக்கொண்டு போகவும் முடிகிறதா என்று பார்த்தால் அப்போது அதிலிருக்கிற கஷ்டம் தெரியவரும் என்றார் விவாகமான புது மாப்பிள்ளை. கல்யாணத்தின் மூலமாக நமக்கென்று ஒரு பெண் ஆகாசத்திலிருந்துங் குதித்து நமது கையைப் பிடித்து நமக்கு என்றும் விட்டுப் பிரியாத பெரிய துணையாகி விடும்போது அந்த இன்பக்கட்டி எப்படி ஐயா கசக்கும்?—இந்த இன்பக் கட்டியைப் பெரியதொருபளுவு என்றும், அதைச் சுலபத்தில் திருப்தி

---

சில வேலைகளை—அது தொடங்கிய நேரம் என்ன நேரமோ—இன்னும் முடிவு பெறாமல் அப்படியப்படியே பாதிபாதியாய்க் கிடக்கின்றன.

செய்து அதனேடு வாழுவது வெகு சிரமம் என்றும் எப்படி ஐயா வாய் திறந்து மௌடீகமாய்ப் பேசுகிறீர்கள்—என்ருர் கல்யாண சுந்தரம். நேற்றிரவு சாந்தி முகூர்த்தம் ஆனவன் இன்று காலையில் எப்படி வாயடங்கி அதைப்பற்றிப் பேசாமலே மௌன மாயிருக்கிருனே, அவ்விதமே நீயும் விவாகசுகங் கண்டு விட்டால் எல்லா பேச்சுகளுக்கும் ரஜாகொடுத்து விட்டு ஓய்ந்து எங்களைப் போல அடங்கி விடுவாய் என்ருர் சுசீப் சேட். பத்து தேசங்களைக் கட்டிக்கொண்டு சுலபத்தில் ஆண்டு விடலாம்; ஆனல் ஒரு பெண்ணையோ-குடும்பத்தையோ கட்டிக்கொண்டு ஆளுவது மகா கஷ்டம் என்ருர் அண்டர் புகழும் அஷ்டாவதானம் ஆடுசாபட்டி வித்வான் ஸ்ரீமான் அம்மையப்ப பிள்ளை.

ஃ

அதன் பிறகு பல நண்பர்களால் பின்வரும் கேள்விகள் கேட்கப்பட, அதற்கு நமது கடையின் அங்கத்தினர்கள் விடையும் கூறினர்.

1

வினு :—ஒருவன் அழைக்காமலிருக்கும்போதே அவன் வீட்டுக்குக் குடும்ப சகிதம் வலிய வந்து அவனேடு வெகு அன்பாகிச் சிலர் குலாவுகிருர்கள். அவர்கள் எவ்வளவு ஒட்டி அன்பாயிருப்பினும், அவன் சற்று விலகி, எந்தத் தப்பிதங்களும் நடந்து விடாமலிருக்க வேண்டுமே யென்கிற கவலையில் அதிகமாகக் கவனம் செலுத்துகிருன். இவ்விதமாக ஜாக்கிரதையாகவுள்ள மனமாறுதல் அவனுக்கு என் உண்டாகிறது?

விடை :—எற்கெனவே இச்சிலருடன் எவ்வளவோ அன்னியோன்யமாயிருந்தும் செலவிட்டுங்கூட, அனுவசியமாய் பெரிய கலகங்கள் விளைந்து பல வருஷம் பேச்சு வார்த்தைகூட இல்லாது போயிருப்பதாலும், அவர்களின் மீறிப்பேசி விடுகிற சுபாவம் தெரிந்திருப்பதாலும், எச்சரிக்கையாய் ஒதுங்கி நின்று முன்னைப்போல் எந்த மனஸ்தாபமும் நேராதவாறு பார்த்துக் கொள்ளப் பிரயாசைப் படுவதில் 'அன்பு இருக்க வேண்டிய இடத்தில் கவலை புகுந்து கொள்வதால்' சாதரணமாகக் குலாவிக் குதுகலிக்க முடியாமற் போகிறது.

2

வினு :—தன் மனைவி தன்னை மீறி விடும் போது குடித்தனத்தை ஒருவன் ஒழுங்குபடுத்துவ தெப்படி?

விடை :—அவள் இல்லாமலேதான் சமாளித்துக் கொள்ளமுடியு மென்று காட்டுவதற்காகத் தனது புசிப்பை ஹோட்டலில் வைத்துக்கொண்டு, தான் யோக்கியதையிலிருந்து தவறி விட்டது போல் நடிப்பதற்காக இரவுப் படுக்கையை வேருேர் வீதியில் போட்டுக் கொண்டு, வீட்டுச் செலவுகளையும் பாதியில் சுருக்கி விடத் தொடங்கினுல் வீட்டுக்காரிக்கும் புதிய யோசனைகள் தோன்றிப் புதிதாக நல்ல புத்தி உண்டாகலாம். தன்னை விட்டுப் போய் விடக்கூடியவன் என்று தெரிந்து விடும்போது எவரும் அடங்கி விடலாம். ஆனல், இந்த நாடக ஜோடிப்பை வீட்டுக்காரன் எவரும் உண்மை யென்று மயங்கிவிடும்படி நடத்த வேண்டும். மனதிலுள்ள அன்பை வெளியில் காட்டவே கூடாது. தன்னுடைய சன்மார்க்கமும் பிசகக்கூடாது.

3

வினு :—ஊர் முழுதும் ஒருவனுக்குக் கடன்கள் நிறைந்திருக்கையில்,

---

துவேஷத்தால் சிலாது நெஞ்சு பாலை வனம்போல் உலர்ந்து போய் விடுகிறது. பிறகு அதில் இரக்கம்—கருணை என்ற ஈரம் தோற்றுவதேயில்லை.

கடைக்காரனை அவன் எவ்வளவு கடனாகக் கேட்டாலும் மறுக்காமல் சாமான்கள் தருவதேன்?

விடை:—அவ்வளவு பக்குவமாக அவன் தனது வெளிக்கடன்களை மறைத்துத் தன்னை என்றைக்கும் ஏராளமான வருவாயுள்ளவன் போலவே காட்டுகிற தந்திரத்தினால் தான். அவன் நாளைக்கு ஊரைவிட்டுக் கம்பி நீட்டுவதா யிருந்தாலுங்கூட இன்றிரவிலும் சிலர் அவனிடம் வட்டிக்குப் பணத்தொகைகள் கொடுத்து வைக்கவும் வரலாம். எல்லாம் போடுகிற வெளி வேஷத்திலிருக்கிறது. சிலருடைய யோக்கியதை உயர்ந்ததா யிருப்பதால் எவ்வளவு கடன் இருப்பினும், மேலும் கடன் தருகிறார்கள்.

## 4

வினா:—எப்பொழுது பார்த்தாலும் சிலர் தலையில் தலைப்பாகையுடனேயே இருக்கிறார்களே—ஏன்?

விடை:—அவர்களின் வழுக்கைத் தலை, நறை மயிர், கிழட்டுமுகம்வெளியில் தெரியாதிருப்பதற்குத் தான்.

## 5

வினா:—தன் மனைவிமீது அதிக நகைகள் இல்லாதிருந்தும், தன்னை ஒரு கௌரவமாகவே நினைத்துக் கொள்வதானால், அப்படி நினைக்க அவனுக்கு எப்படி சாத்தியப்படுகிறது?

விடை:—கடவுள் தன்னை எவ்வளவு தாழ்ந்த நிலையில் வைப்பினும், அதையும் ஒரு கௌரவ ஸ்தானமாகவே பாவித்து, அந்த நிலைக்கும் தன்னால் ஒரு கௌரவத்தை உண்டாக்கிவிட்டு, ஈசன் கொடுத்ததில் திருப்தி பெறுகிற பெரிய புத்தியுள்ளவனாய் இருக்கலாம். அல்லது, மனைவிக்குத் தெரியாமல் வெளியில் ஏராளமான பணம் சேர்த்துவிட்டு, அந்தப் பணத்தின் கௌரவம் தனக்கு இருக்கையில் தன் மனைவிமீது நகையில்லாதது ஒரு தாழ்ந்ததாகவாவது கேவலமாகவாவது ஆகாதென்று நினைப்பவனாக இருக்கலாம். உலகினரும் அவனைப் பணம் இருந்தும் நகை செய்யாதவனென்றே எண்ணிவிடுவதில் அதிலும் ஒரு கௌரவமே ஏற்படுகிறது.

## 6

வினா:—தலை குனியவேண்டிய சமயங்கள் வருவதெப்போது?

விடை:—(1) பிறரிடம் தனக்கு ஒரு காரியம் ஆகவேண்டியிருக்கும் போது. (2) நல்ல பிள்ளையென்று பெயர் பெறுவதற்காக நடிக்கும் போது. (3) கல்யாணப் பெண்ணாக ஆகும்போது. (4) தேர்தலில் தோல்வியுற்றபோது. (5) தான் மறைத்த ஒரு பிசகையோ, களவையோ, சோரநடத்தையையோ, அதற்குடையவர்கள் கண்டுவிட்டபோது. (6) கடன் கேட்கும்போது. (7) பிறர் வீட்டில் உண்ணும்போது. (8) தான் ஒருவர் மீது கண்போட்டு அவரையே பார்த்து நிற்கையில், தன்னை அந்த ஒருவர் சட்டென்று திரும்பிப் பார்த்து விடும்போது. (9) கெட்ட காலத்தின் போது. இவ்விதமே நெடுகச் சிந்தித்துக்கொள்க.

வினா விடைகள் இவ்வாறு ஒரு ஐம்பதுபோல் நடந்த பின்பு நமது கடையும் தீபாவளி வர்தனத்துடன் பூர்த்தி பெற்றது.

'பஹதூர்' பொன்வண்டு செட்டியார்.

---

அன்பே! உன்னைவிட்டு நான் ஏன் பிரிந்திருக்க வேண்டுமோ?—ஏன் உனக்கு நான் பல முறையும் கடிதங்கள் எழுதத்தவறி விடுகிறேனோ? ஹா. விதியே!! என்னை நீ மன்னிப்பாயா?




## முக்கியமான மூன்று தொழில் சாஸ்திரங்கள்.



பிரபஞ்சமுழுவதையும் மூன்று விதமான தொழில் சாஸ்திரங்கள் ஆளுகின்றன. எத்தேசத்திலும் பொருள்வளமுண்டாவது மூன்று விதவழிகளால்தான். முதலாவது, நிலத்தைப் பயிர் செய்து உணவுப்பொருள்களையும், மற்றபொருள்களையும் ஆக்குதல். இரண்டாவது, பூமியின் மேற்புறத்திலும், பூமியின் அடிப்புறத்திலும் கிடைக்கக்கூடிய பொருள்களை மனிதனுடைய முயற்சியால் அவனுக்கு உபயோகப்படக்கூடிய சாமான்களாக மாற்றுதல். பூமியின் மேற்புறத்தில் விளைந்த பருத்தியைத் துணியாக்குவதும், பூமியின் அடிப்புறத்திலுள்ள சுரங்கங்களிலிருந்து கிடைக்கும் இரும்பைக் கத்தி முதலிய சாமான்கள் ஆக்குவதும் இதற்கு உதாரணங்களாகும். மூன்றாவது, இந்த இரண்டு விதமாய்க் கிடைக்கும் பொருள்களை ஜனங்களுக்கு உபயோகமாகும்படி வியாபாரம் செய்தலாம். விளைந்த பொருள்களையும், தயாரான சாமான்களையும் அவை உண்டாக்கப்பெற்ற இடங்களிலேயே வைத்திருந்தால், மற்ற இடங்களில் வசிக்கும் ஜனங்களுக்கு அவைகள் கிடைத்தல் சாத்தியமல்லவாகையால், பற்பல இடங்களுக்கு அவைகளைக் கொண்டுபோய்ச் சிலர் விற்றல் அவசியம். ஆகவே, இம்மூன்றுவிதமானவழிகளும் தேசத்தின் பொருள் வளப்பத்துக்கு அவசியம்.

ஃ

மனித ஸமூகம் தோன்றின கால முதல் இந்த மூன்று வழிகளும் அனுஷ்டிக்கப்பட்டு வருவதால், கால அளவில் இவைகள் விசேஷமாய் வளர்ந்து பரவி, அவைகளுக்குரிய உபாயங்களும்—தந்திரங்களும்—அறிவும் உண்டாய்ப் பெருகி, இம்மூன்றில் ஒவ்வொன்றும் ஒரு பெரிய சாஸ்திரமாகி விட்டது. விவசாயத்தொழிலும், சுரங்கங்களிலிருந்து உலோகங்கள் எடுக்குந் தொழிலும், இத்தொழில்களாற் கிடைக்கும் பொருள்களை சாமான்களாக்குதலும், அவற்றை ஆங்காங்குவியாபாரம் செய்தலுமான வர்த்தகமும் பெரும் சாஸ்திரங்களாய் அபிவிர்த்தி பெற்றுள்ளன.

ஃ

வியவசாய சம்பந்தமான நானா இடத்துச் செய்முறை அனுபவங்களையும் அறிவுகளையும் நவீன சாஸ்திரமாக ஒன்று சேர்த்திருப்பதில் புதிதான உபாயங்கள் தோன்றவும், அவைகளால் பூமியின் விளைவு அதிகப்படவும் காரணமாகிறது. இப்படியே, பூமியின் கீழுள்ள சுரங்கங்களில் கிடைக்கும் அநேக உலோகங்களை எடுத்துச் சாமான்களாக உபயோகப்படும்படி

செய்வதில், பல இடங்களில் நேரிடும் பல அனுபவங்களைத் திரட்டி மதிநுகிகள் சாஸ்திரமாகச் செய்திருக்கிறார்கள். இந்த சாஸ்திரத்தை நம்மவர்கள் கற்க வசதிகள் அதிகமில்லை. பூர்வம் இந்தியாவில் சமாதானமும் சாவதானமும் நிலைத்திருந்த காலத்தில் நம்மவர்கள் சுரங்கங்களைத் தோண்டி, பொன் இரும்பு முதலிய உலோகங்களை எடுத்துச் சாமான்களாக்கி, அவைகளை விற்றுவந்தார்கள். ஆயினும், பிற்காலத்தில், முக்கியமாய்ப் பதினெட்டாம் நூற்றாண்டில் தேசத்தில் புரட்சியும் அநாயகமும் மேலிட்டு, ஜனங்கள் செய்யும் தொழில்கள் எப்போதும் போல்நடவாமல், சுரங்கங்களினின்று உலோகங்களை எடுக்கும் தொழிலைக் கைவிட்டு விட்டதாகத் தெரிகிறது.

ஃ

முற்காலத்தில் உலோகங்களால் செய்யப்பட்ட சாமான்கள் பழக்கத்தில் ஏராளமாய் இருந்திருக்கிறபடியால், அவைகளை நம் தொழிலாளிகள் நம் தேசத்துச் சுரங்கங்களினின்றும் எடுத்து அந்த உலோகங்களைக் கொண்டே யாவும் செய்திருக்க வேண்டும். பொன், இரும்பு, பித்தளை, செம்பு முதலிய உலோகங்களால் செய்யப்பட்ட சாமான்கள் வெகு வேலைப்பா டமைந்தனவாகக் காண்கின்றன. இந்தத் தொழிலையும், இவ்வேலைப்பாட்டையும் நம்மவர்கள் தற்காலம் மறந்தே போயினர். அளவிலும் மதிப்பிலும் கணக்குக்கு அகப்படாத உலோகங்கள் இப்போதும் நம் தேசத்துச் சுரங்கங்களில் கிடைப்பதாயிருந்தும் நமக்கு அவைகள் பயன்படவில்லை. அதற்கான சாஸ்திர ஞானமும் நமக்கு இல்லை. இந்தச் சுரங்கப் பொருள் சம்பந்தமான சாஸ்திரத்தை நம் சிறுவர்கள் கற்று, அவர்களுக்கு நம் முதலாளிகள் பொருளுதவி செய்து, நம் தேசத்துச் சுரங்கப் பொருள்களை நமக்கு லாபம் தரும்படி செய்ய எப்போதுதான் முன் வருவார்களோ? என்றுதான் அதற்கான அறிவு தோன்றுமோ?

ஃ

கிருஷி சாஸ்திரம், சுரங்க சாஸ்திரம் இவ்விரண்டையும் தவிர, வியாபார சாஸ்திரம் ஒன்றிருக்கிறது. அதில், கம்பெனிகள் ஸ்தாபித்தல், பாங்குகள் வைத்து நடத்தல், பல தேச நாணய மாற்றம், விலை வாசிகளின் ஏற்றத் தாழ்வையறிதல் முதலிய விஷயங்கள் அடங்கியுள்ளன. இந்த சாஸ்திரத்தையும் நம் சிறுவர்கள் கற்றல் அவசியம். முற்காலத்தில் நம்மவர்கள் வியாபாரம், வர்த்தகம் முதலியவைகளை நடத்தி வந்ததுபோல், தற்காலத்தில் நடத்தல் சாத்தியமல்ல. அன்னிய தேசத்தார் நம் தேசத்தில் பிரவேசிப்பதாலும், அன்னிய தேசங்களில் நாம் பிரவேசிப்பதாலும், உலகத்துப் பொருள்கள் விளைந்த இடங்களிலேயே செலவாகாமல் தூரஸ்தலங்களுக்குக் கொண்டு போகப் படுவதாலும், ஒரு இடத்து லாப நஷ்டங்கள் மற்ற இடத்து லாப நஷ்டங்களைப் பாதிப்பதாலும், வியாபார மென்பது பெருந்தொழிலாக விரிந்து, உலகத்தையே தழுவி நடத்த வேண்டியதாயிருக்கின்றது. நமது சிறுவர்கள் இந்த வியாபார சாஸ்திரத்தை அதன் பல கிளைகளையும் சேர்த்துக் கற்க வேண்டுவதவசியம். இவற்றை யெல்லாம் ஆராய்ந்து கற்காது கேவலம் குமாஸ்தாக்களாவதற்கான கல்வித் துறையிலேயே பயில்வதாகில் நாம் முன்னேற்ற மடைதல் கூடுமா?

---

வக்கீல்களால் மோசத்தில் சிக்காமல் தப்பித்து வாழ்ந்த குடும்பங்களும் எத்தனையோ உண்டு. அதையும் கொஞ்சம் நினைத்துப் பார்க்கவேண்டும்.

# சென்றமாதம்

"அதிலும் இது புதுமை, இதிலும் அது புதுமை" என்பதாக லண்டன் வட்டமேஜை மகா நாட்டின் செய்திகள் மிகு விசித்திரமாயுள்ளன. இந்தியாவுக்கு ஸ்வராஜ்யம் என்பது என்னென்ன மூலாதாரங்களுடன் கொடுக்கப்படப் போகின்ற தென்பதைக் குறித்துப் பிரிட்டிஷ் அரசாங்கத்தினர் இன்னும் வெளியிடவில்லை. தத்தம் வகுப்பினருக்கு அதிக சுதந்தரம் வேண்டு மென்பதைப் பற்றியே பெரிய வாதங்கள் நிகழ்ந்து வருகின்றன. விவாகத்திற்குக் கடை நெய் உபயோகிப்பதா, வெண்ணெய் காய்ச்சிய நெய்யை உபயோகிப்பதா, என்பதைப்பற்றிய தர்க்கமாயிருக்கிறதே யன்றி மணப்பெண்ணைத் தெரிந்தெடுத்ததாகவும், நிச்சயித்ததாகவுமில்லை. இவ்விதம் பேச்சிலேயே காலம் போக்கிவிட்ட செய்திகள் பூர்வ இந்தியாவின் சரித்திரத்தில் எவ்வளவோ உண்டு. வட்டமேஜை மகாநாட்டின் கடைசி முடிவு காயோ, கனியோ, யாதோ!

ஃ

"வாழ்க நீ எம்மான்" என்று மகாத்மாஜியின் 63-வது பிறந்தினத்தைப் போற்றுகின்றோம். 2-10-31-முதல் மகாத்மாவின் 63-வது பிராயம் ஆரம்ப மாகின்றது. பழய இந்தியா திலக முனிவரை நம்பிக் கிடந்தது. இந்தியாவோ மகாத்மாஜியை நம்பிக் காத்திருக்கின்றது. சென்னையில் மகாத்மாஜியின் பிறந்த தின வைபவத்தின் போது நமது பத்திரிகைத் தலைவர் ஸ்ரீமான் தி. இராஜகோபால் முதலியார் அவர்கள் தமது சொந்தச் செலவில் புஷ்பமானம் தயாரித்து அதில் மகாத்மாஜியின் உருவச்சிலையை எழுந்தருளச் செய்து விசேஷித்த மங்கள வாத்தியங்களுடனும், பஜனை கோஷ்டிகளுடனும் ஊர்வலம் வந்தமை அற்புதக் காட்சியாயும் நேத்திரானந்தமாயு மிருந்தது. மகாத்மாஜீ பல்லாண்டுகள் வாழ்ந்து ஸ்வராஜ்யம் கண்டு இன்புறுவாராக.

ஃ

"பழய வெள்ளத்தைப் புது வெள்ளம் கொண்டு போயிற்று" என்பதாக, உணவுப் பொருள்களின் விலைவாசிகள் நயமாய் விட்ட தென்ற மகிழ்ச்சியில் பூரிக்கப்போக, மற்றொரு பக்கத்தில் வேறொரு பேரிடி விழுந்திருக்கின்றது. உத்தியோகஸ்தர்களின் சம்பளம் 100-க்கு 10-வீதம் குறைக்கப்படப் போகிறதாம்! 40-50 ரூபாசம்பளக்காரர்கட்கும்குறைக்க யோசனையாம்! அரையணு கார்டு இனி முக்காலணுவாம்! முக்காலணுவுக்குக் காய் கறி வாங்கினால் ஒரு குடும்பத்துக்குப் போதுமே! கவர் இனி 1½ அணுவாம்! 2-அணுவி லிருந்த ரிஜிஸ்தர் செலவு 3-அணுவாகி விட்டது. மணியாடர் கமிஷனும் 3-அணுவுக்கு உயரும். எல்லாத் தபால் வகையும் 100-க்கு 50-வீதம் உயருமாம்! இதுவன்றி இனி வெவ்வேறு புது வரிகளும் தோன்றி யிருக்கின்றன. தபாற் சாலையையே நம்பி யிருக்கும் வியாபாரஸ்தலங்களின் பாடு பரிதாபமே! ஒரு ரூபாய் புஸ்தகத்தை அனுப்ப அரை ரூபாய் தபாற் செலவாகிவிடும்! அரையணு கார்டின் காலத்திலேயே கடிதம் எழுதாதவர்களா இனி முக்காலணு கார்டு காலத்தில் எழுதப் போகிறார்கள்! இதுதான் இந்திய நங்கை இன்று கண்ட புதிய சுகம் போலும்!

# "அமிர்த குணபோதினி"

## பிரஜோத்பத்தி வருஷத்திய ஐப்பசி மாத பஞ்சாங்கம்.

| யோகம் | இங் | தமிழ் | வார | திதி, நக்ஷத்திரம், விரதாதிகள் முதலியவை. |
|---|---|---|---|---|
| சி | 17 | 1 | ச | ஸப் 51-47, பூரா 60-0, துலாரவி 2-40, துலாஸ்னன [மாரம்பம், விஷுவத் |
| சி-அ | 18 | 2 | ஞா | அஷ் 53-4, பூரா 0-24. [திருக்கச்சியூர் பார்வேட்டை. |
| ம-அ | 19 | 3 | தி | நவ56-14, உரா 3-39, மஹா-துர்க்கா-நவமி, ஆயுதபூஜை. |
| | | துலாஞ (5-16) | | |
| சி | 20 | 4 | செ | தச 60-0, ஞுவ 8-18, விஜயதசமி. |
| பி-சி | 21 | 5 | பு | தச0-55, அவி 14-29. [ஜீவவார-ஸர்வைகாதசி, கரிநாள். |
| ம-சி | 22 | 6 | வி | ஏகா 6-41, சத 21-39, துளசீ விரதம், கோதுவாதசி. |
| சி | 23 | 7 | வெ | துவா 13-10, பூட் 29-23, பிரதோஷம். |
| சி-பி | 24 | 8 | ச | திர 19-52, உட் 37-14, அதிதி விருச்சிகாயனம்21-47. |
| அ-சி | 25 | 9 | ஞா | சசி 26-24, ரே 44-50, மயூரம் ரதம். |
| சி | 26 | 10 | தி | ○ 32-26, அசு 51-52, கௌமுதீ விரதம், மஹா பூர்ணிமை, மாயவரம் ரிஷபவாஹனம். |
| சி | 27 | 11 | செ | பிர 37-48, பர 58-14. |
| அ | 28 | 12 | பு | துவி 42-17, கிரு 60-0, கிருத்திகா விரதம். |
| ம-உ | 29 | 13 | வி | திரி 45-47, கிரு 3-45, சந்திரோதய கௌரீவிரதம், ஸ்ரீரங்கம் டோலோத்ஸவம். |
| ம-சி | 30 | 14 | வெ | சது 48-10, ரோ 8-16. |
| சி | 31 | 15 | ச | பஞ் 49-23, மிரு 11-39. |
| | நவம்பர் | | | |
| சி | 1 | 16 | ஞா | ஷஷ்49-15, ஆரு 13-53 |
| அ-சி | 2 | 17 | தி | ஸப் 47-48, புந 14-46. |
| சி | 3 | 18 | செ | அஷ் 44-56, பூச14-20. |
| சி | 4 | 19 | பு | நவ 40-43, ஆயி 12-28. |
| அ-சி | 5 | 20 | வி | தச 35-13, மக 9-20, கரிநாள். |
| சி-அ | 6 | 21 | வெ | ஏகா 28-35, பூர 4-53, உப 54-38, ஸர்வைகாதசி. |
| ம | 7 | 22 | ச | துவா 20-53, ஹஸ் 53-23, பிரதோஷம். [சிவராத்திரி. |
| சி | 8 | 23 | ஞா | திர 12-37, சித் 46-51, ராத்திரி நரகசதுர்தசிஸ்னனம், |
| அ-ம | 9 | 24 | தி | சசி 4-10, உப ● 51-37, ஸ்வா 40-16, தீபாவளி, கேதார விரதம், ஸ்வாதி தீபாவளி. |
| ம-சி | 10 | 25 | செ | பிர 47-53, விசா 34-0, கார்த்திகசுத்தம், பலிபூஜா, விக்ரம சகமாரம்பம். |
| அ-சி | 11 | 26 | பு | துவி 40-55, அநு 28-32, யமதுவிதியா, சந்திரதரிசனம். |
| பி-சி | 12 | 27 | வி | திரி 35-14, கேட் 24-25, திரிலோசன கௌரீபூஜா. |
| அ-பி | 13 | 28 | வெ | சது 31-17, மூல 21-55, நாக சதுர்த்தி. |
| சி | 14 | 29 | ச | பஞ் 29-20, பூரா 21-20 |
| அ | 15 | 30 | ஞா | ஷஷ் 29-31, உரா 22-48, சூரஸம்ஹாரம், துலாஸ்நான [முடிவு. |

| | | | |
|---|---|---|---|
| ரா | | | |
| | 15உக்கு ராசி. | | குரு |
| சனி | குஜ | ரவிபுதசுக் | கே |

"அமிர்த குணபோதினி" பிரஸ், 302, தங்கசாலை வீதி, சென்னை—1931.